ஓம் தத் சத்

ஸ்ரீமத் அமலானந்த சுவாமிகள் துணை
ஸ்ரீமத் லக்ஷ்மணானந்த சுவாமிகள் துணை
ஸ்ரீமத் சுந்தரானந்த சுவாமிகள் துணை
ஸ்ரீமத் சப்தகிரி சுவாமிகள் துணை

வேலும் மயிலும் துணை



குருநாதர் பாம்பன் ஸ்ரீமத் குமரகுருதாச சுவாமிகள்

ஸ்ரீ கமலானந்த வேதாந்த சேவா சங்க
இலவச வெளியீடு



ய்வத்திரு. **இரா. வேலம்மாள்**
அவர்களின் நினைவுமலர்

# சுவாமி விவேகானந்தரின் அருள்வாக்கு



1. சுயநலக்காரனுக்கு நரகத்தில் கூட இடமில்லை.
2. தீய காரியம் செய்பவன் குருடனுக்கு ஒப்பாவான். நல்லதைக் கேளாதவன் செவிடனுக்கு ஒப்பாவான்.
3. குழப்பம் செய்வது, கொலையைவிடக் கொடிய பாவமாகும்.
4. மற்றவர்களுக்கு நன்மை செய்வதன் மூலம், ஒருவன் உண்மையில் தனக்குத்தானே நன்மை செய்து கொள்கிறான்.
5. "அச்சமில்லை அச்சமில்லை" என்று எப்போதும் முழங்கு, "அஞ்ச வேண்டாம்" என்று எல்லோரிடமும் சொல்.

11-2

உ

ஓம் தத் சத்

திடஞானி தெரிசனமே தீர்த்த மாடல்
திடஞானி தெரிசனமே தேவ பூஜை
திடஞானி தெரிசனமே செய்யுமறங்கள்
திடஞானி தெரிசனமே சிவத்தைக் காணல்
திடஞானி தெரிசனமே மேவுவதற்கு
திரிவிதமா உலகத்தில் அரிதாம் யார்க்கும்



மகா சமாதியடைந்த தேதி : 13-8-1950

**ஸ்ரீமத் அமலானந்த சுவாமிகள்**

# அர்ச்சனை திருப்புகழ்

சீதள வாரிஜ பாதா ! நமோ நம
நாரத கீத விநோதா ! நமோ நம
சேவல மாமயில் ப்ரீதா ! நமோ நம மறைதேடு

சேகரமான ப்ரதாபா ! நமோ நம
ஆகம சார சொரூபா ! நமோநம
தேவர்கள் சேனைம கீபா ! நமோ நம கதிதோய

பாதக நீவு குடாரா ! நமோ நம
மாவசு ரேசர் கடோரா ! நமோநம
பாரினி லேஜய வீரா ! நமோ நம மலைமா

பார்வதி யாள்தரு பாலா ! நமோ நம
நாவல ஞான மனோலா ! நமோநம
பால குமார சுவாமி ! நமோ நம அருள்தாரா

போதக மாமுகன் நேரான சோதர
நீறணி வேணியர் நேயா ப்ரபாகர
பூமக ளார்மரு கேசா மகோததி இகல்சூர

போதக மாமறை ஞானா தயாகர !
தேனவிழ் நீபந றாவாரு மார்பக !
பூரண மாமதி போல் ஆறு மாமுக ! முருகேசா

மாதவர் தேவர்க ளோடே முராரியும்
மாமலர் மீதுறை வேதாவு மேபுகழ்
மாநிலம் ஏழினும் மேலான நாயக ! வடிவேல

வானவர் ஊரினும் வீறாகி வீறள
காபுரி வாழ்வினு மேலாக வேதிரு
வாழ்சிறு வாபுரி வாழ்வே ! சுராதிபர் பெருமாளே

உ

ஓம் தத் சத்

# குரு மரபு வணக்கம்

பெறுமைபெறு கைலாச சம்பத் கிரிப்
பிரமபீடத் தருட்பெரு மாதிசங்கரர் வழிப்
பேசருநி ஜானந்தர் அச்சுதா னந்தரும்
பிறங்கு வேதாந்த முடிவின்
பொருநிலையி னுருவாய சகஜனிட்டானந்த
போதவா தவனாய சீர்
பொருவில்கங் காராமெனுஞ் ஜீவமுக்தனும்
போற்றுவே தாந்த வித்வ
தருவனைய விமலபர துரிய மெய்ஞ்
ஞானியாய்ச் சாரீரா ஜானந்தரும்
தண்டலை யுடுத்துபுக ழெண்டிசை
பரந்தழகு தாவுதிரு நாகவேட்டுப்
பொருவற்ற தவராஜ சிங்கமாய் வந்தெமைப்
புன்மைதீர்த் தாண்டருள் செய்யும்
புகலும த்விதவம லானந்த மெஞ்ஞானி
பொன்னடிக் கேதுணை துணையரோ



தோற்றம் : 1905 - மறைவு : 1967

**ஸ்ரீமத் அ. இலக்ஷ்மணானந்த சுவாமிகள்**




வேலும் மயிலும் துணை

# சிறுவாபுரித் திருப்புகழ்

ண்டர்பதி குடியேற மண்டசுரர் உருமாற
அண்டர்மன மகிழ்மீற அருளாலே
ந்தரியொ(டு) உடனாடு சங்கரனும் மகிழ்கூர
ஐங்கரனும் உமையாளும் மகிழ்வாக

ண்டலமும் முனிவோரும் எண்திசையில் உளபேரும்
மஞ்சினனும் அயனாரும் எதிர்காண
ங்கையுடன் அரிதானும் இன்பமுற மகிழ்கூற
மைந்துமயி லுடானடி வரவேணும்

ண்டரிக விழியாள!! அண்டர்மகள் மணவாள!
புந்திநிறை அறிவாள!! உயர் தோளா
பொங்குகடலுடன் நாகம் விண்டுவரை இகல்சாடு
பொன்பரவு கதிர்வீசு வடிவேலா

தண்தரள மணிமார்ப !! செம்பொன் எழில் செறிரூப !!
தண்தமிழின் மிகுநேய முருகேசா
சந்ததமும் அடியார்கள் சிந்தையது குடியான
தண்சிறுவை தனில்மேவு பெருமாளே

  

# அர்ச்சனை திருப்புகழ்

சீதள வாரிஜ பாதா ! நமோ நம
நாரத கீத விநோதா ! நமோ நம
சேவல மாமயில் ப்ரீதா ! நமோ நம

சேகரமான ப்ரதாபா ! நமோ நம
ஆகம சார சொரூபா ! நமோநம
தேவர்கள் சேனைம கீபா ! நமோ நம

பாதக நீவு குடாரா ! நமோ நம
மாவசு ரேசர் கடோரா ! நமோநம
பாரினி லேஜய வீரா ! நமோ நம

பார்வதி யாள்தரு பாலா ! நமோ நம
நாவல ஞான மனோலா ! நமோநம
பால குமார சுவாமி ! நமோ நம

போதக மாமுகன் நேரான சோதர
நீறணி வேணியர் நேயா ப்ரபாகர
பூமக ளார்மரு கேசா மகோததி

போதக மாமறை ஞானா தயாகர !
தேனவிழ் நீபந றாவாரு மார்பக !
பூரண மாமதி போல் ஆறு மாமுக !

மாதவர் தேவர்க ளோடே முராரியும்
மாமலர் மீதுறை வேதாவு மேபுகழ்
மாநிலம் ஏழினும் மேலான நாயக !

வானவர் ஊரினும் வீறாகி வீறள
காபுரி வாழ்வினு மேலாக வேதிரு
வாழ்சிறு வாபுரி வாழ்வே ! சுராதிபர்



# R.வேலம்மாள்

மறைவு - 26.01.95

திதி-ஏகாதசி

**தெய்வத்திரு. இரா. வேலம்மாள்**



தவத்திரு இரா. பூவிலுடையார் சுவாமிகள்
இயற்றிய பாடல்களின் தொகுப்பு



## தெய்வத்திரு. பூ. கிருஷ்ணம்மாள்

தோற்றம்
**14-03-1941**

மறைவு
**13-0-1993**

திதி - அஷ்டமி

# வரம் தரும் திருப்புகழ்

பிறவியான் சடமி றங்கி வழியி லாத துறைசெ றிந்து
பிணிக ளான துயர்உ ழன்று தடுமாறிப்
பெருகு தீயவினையி னொந்து கதிகள் தோறு மலைபொருந்தி
பிடிப டாத ஜனன நம்பி அழியாதே

நறைவி ழாத மலர்மு கந்த அரிய மோன வழிதிறந்த
நளின பாதம் எனது சிந்தை அகலாதே
நரர்சு ராதி பரும்வ ணங்கும் இனிய சேவைதனை விரும்பி
நலனதாக அடியன் என்று பெறுவேனோ

பொறிவ ழாத முனிவர் தங்கள் நெறிவழாத பிலனுழன்று
பொருதி சாச ரனைநி னைந்து வினைநாடிப்
பொருவி லாமல் அருள்பு ரிந்து மயிலின் ஏறி நொடியில் வந்து
புளக மேவ தமிழ்பு னைந்த முருகோனே

சிறுவ ராகி இருவர் அந்த கரிப தாதி கொடுபொருஞ்சொல்
சிலைஇ ராமன் உடனா திர்ந்து சமராடிச்
செயம தான நகர்அ மர்ந்த அளகை போல வளமிகுந்த
சிறுவை மேவி வரமி குந்த பெருமாளே

ஓம் தத் சத்

## நன்றியுரை

அகண்ட பரிபூரண சச்சிதானந்த சொரூபமாக விளங்கும் குருநாதனை முதற்கண் வணங்கி இந்த நன்றியுரையை எழுதுகிறேன்.

மேதகு தவத்திரு தியாகச் செம்மல் **கு. தியாகராஜன்** ஐயா அவர்கள் கண்டிகை புதூர் கிராமத்தை தத்தெடுத்து கண்ணிமை போல் காத்து வளர்த்து வரும் பாங்கு பாராட்டுக்குரியது மட்டுமல்ல போற்றுதலுக்கும் உரியது. அன்னார் தன் குடும்ப சகிதமாய் தொண்டு புரிந்து வருகிறார். அவர்களை என் இதயத்தில் பதித்து விட்டேன். உயிருள்ளவரை என்னால் மறக்க இயலாது என்பதைப் பணிவுடன் கூறிக் கொள்கிறேன்.

அடியேனை ஒரு பொருட்டாக மதித்து "**ஆத்ம ஞான விருது**" என்ற "**ஆத்ம ஞான கவி**" என்ற சிறப்புப் பட்டமும் வழங்கியுள்ளார்கள்.

தவத்திரு **ப்ரம்மஞானம்** அவர்கள் தத்போத மாத இதழ் ஆசிரியர் செய்துவரும் தொண்டு அளப்பரியது என்று சொன்னால் மிகையாகாது. அன்னார் தந்துள்ள அணிந்துரைக்கு அவரை என் சிரம் தாழ்த்தி வணங்குகிறேன். அடுத்தபடியாக விபு வித்யா பீடத்தின் உயிரோட்டமாக விளங்கி, வேதாந்தத்தை சுருக்கமாகவும் தெளிவாகவும் எடுத்துரைத்து ஆன்மிகத் தூண்களை உருவாக்கி கொண்டு வரும் பெருந்தகை தவத்திரு. **ஜவஹர்** சுவாமிகளுக்கும் எனது பணிவான வணக்கத்தைத் தெரிவித்துக் கொள்கிறேன்.

கந்தனேரி தவத்திரு. பேராசிரியர் **அண்ணாமலை அடிகளார்** செய்து வரும் ஆன்மிகத் தொண்டை அளவிட முடியாது. மௌனகுரு சுவாமிகளின் சீடராக இருந்து பல வேதாந்த நூல்களுக்கு தமிழில் உரை எழுதியுள்ளார்கள். 98 வயதுள்ள பேரறிஞர் இளமையாகவே இருந்து கொண்டு

பல ஆன்மிகச் சொற்பொழிவுகளை நிகழ்த்தி வருகிறார். அவரது தொண்டு வானளாவி நிற்கிறது என்பதை மறக்க இயலாது. **மௌன குரு சுவாமிகள்** 300வது வயது வரை வாழ்ந்து வேதாந்த பாடம் சொல்லியிருக்கிறார். **மகாத்மா காந்தி** கூட சுவாமியைப் பற்றிக் கூறியுள்ளதாவது இவர் போன்ற ஞானிகள் நமது பாரதத்திற்குத் தேவை என்று கூறியுள்ளார். அவர்கள் அணிந்துரை தந்திருப்பது இந்த நூலுக்கு மிகுந்த பெருமை தருகிறது என்பதில் ஐயமில்லை. அடிகளாரின் பொற்பாத கமலங்களை வணங்கி நன்றி கூறுகிறேன். பாடியநல்லூர் விபு வித்யா பீட நிறுவனர் மேதகு **மகராஜன்,** M.A.,Retd.E.O. அவர்கள் அணிந்துரை எழுதியிருப்பதில் நான் மட்டற்ற மகிழ்ச்சி அடைகிறேன். அன்னாரின் ஆன்மிகத் தொண்டு பாராட்டுக்குரியதாகும். சுவர் இன்றி சித்திரம் வரைய இயலுமா? தகுந்த நல்ல இடத்தைத் தந்துபல அன்பர்களுக்கு வேதாந்த பாடம் சொல்லித் தரும் மையமாக அமைத்துள்ளார். தவத்திரு. ஜவஹர் சுவாமிகளின் அரும் பெரும் தொண்டுக்கு வாய்ப்பு அளித்துள்ள புண்ணியம் அன்னாருக்கும் அவரது குடும்பத்தாருக்கும் சேரும் என்பதில் ஐயமில்லை.

அன்னாருக்கு அடியேனது நன்றியை சிரம் தாழ்த்தி கூறிக் கொள்கிறேன்.

நன்றி ! வணக்கம் !



ஆன்மிகத் தொண்டில்

**இரா. பூவிலுடையார்**

பிளாட் 2A, சுகுணா காலனி விரிவு,
குரோம்பேட்டை, சென்னை - 44.
செல் : 94444 72689

அணிந்துரை

## எல்லாம் அவன் செயல்

கண்டிகை கிராம மனிதநேய நற்பணி மன்றம்
கண்டிகை புதூர், சென்னை-67.

"அன்பெனும் பிடியுள் அகப்படும் கருப்பொருள்" என்ற இறைவாக்கிற்கிணங்க அன்பின் அடையாளமாய் திகழும் நூல் ஆசிரியர் மேதகு இரா. பூவிலுடையார் அவர்கட்கு முதற்கண் வணக்கமும் அன்பு மாலையையும் சூட்டி இவ்வாழ்த்தை அர்ப்பணிக்கின்றோம்.

என்றுமே தன் கவிதைகள் வாயிலாக இனிமையையும், ஆன்மிகத்தையும், அன்பையும், நேசத்தையும், சேவையையும் கலவையாக வாரி வழங்கும் வள்ளலுக்கு சமர்ப்பணம். அன்னாரின் எழுத்துக்கள் ஒருசில அனுபவ வார்த்தைகளாக இருந்தாலும் பல அனுபவங்கள் பல பெரியோர்களின் அறிவுரைகளால் உணரப்பட்டு தானாக இறையருளால் விழுந்த சொற்களே என்பதை உற்றுநோக்கின் விளங்கும்.

எனவே அன்னாரின் சேவை எல்லோரையும் சென்றடைய எல்லாம் வல்ல இறையை இறைஞ்சி வாய்ப்புக்கு நன்றி கூறி இத்துடன் எனது அணிந்துரையை நிறைவு செய்கிறேன்.

நன்றி ! வணக்கம் !

இவண்
கண்டிகை கிராம மனித நேய நற்பணி மன்றம்
கண்டிகை புதூர், சென்னை-67

**தவத்திரு. செம்மல் கு. தியாகராஜன்**
மெடிக்கல் ஆபீஸர்
(கண்டிகை கிராம காப்பாளர்)



ஓம் தத் சத்
பரப்பிரம்மணே நம:

## தவத்திரு. ஜவஹர் சுவாமிகள்

"அமலானந்த அறிவொளி" தவத்திரு. பூவில் உடையார் சுவாமிகளுக்கு விபு வித்யா பீடத்தாரின் நான்காம் ஆண்டு விழாவில் "**ஆத்ம ஞான கவி**" என்ற சிறப்பு பட்டம் கொடுத்து கவுரவித்தார்கள் என்பது அனைவரும் அறிந்ததே. ஆத்ம ஞானம் சம்பந்தமான பாடல்களை நீண்ட காலமாக இயற்றி வரும் சுவாமிகளுக்கு "**ஆத்ம ஞான கவி**" என்று கவுரவித்தது மிகவும் பொருத்தமான ஒன்றே. இப்போது அவர் இயற்றிய கணக்கற்ற பாடல்களில் தத்துவஃஞானத்தை பிரதிபளிக்கின்ற ஒரு சிலவற்றை மெய்யன்பர்களின் வேண்டுகோளுக்கு இணங்க மறுபடியும் அச்சிட்டு வெளியிடுகிறார்கள் என்பதிலிருந்தே இவர் தம் பாடல்களுக்கு மக்கள் மத்தியில் எத்தனை வரவேற்பு இருக்கிறது என்பது தெள்ளத் தெளிவு.

இவர் இயற்றிய பாடல்களில் எமக்கு மிகவும் பிடித்த பாடலும் யாம் அவ்வப்போது அச்சுதாசர் கீர்த்தனைகளை பாடும்போது மறக்காமல் சுவாமிகள் இயற்றிய "**பொறுமையே தவமாகும்**" என்ற பாடலை பாடத் தவறுவதில்லை. இந்தப் பாடல் ஆத்ம ஞானம் பெறுவதற்கு முயலும் அதிகாரி புருடர்களுக்கு மிகவும் உதவியாக இருக்கிறது என்பதில் எவ்வித சந்தேகமும் இல்லை. அந்த அளவிற்கு இப்பாடலில் கருத்துக்களைப் பொழிந்துள்ளார்.

மேலும் "**போதும் போதும் பிறந்தது போதும்**" என்ற பாடல் மந்த புருடர்களுக்கு இந்த உலக வாழ்க்கையின் அநித்தியத்தை மிகத்தெளிவாக எடுத்துரைக்கிறது. இதே பாடலை "**மந்திரப்புன்னகை**" என்ற படத்தில் ஒரு சில மாற்றங்களோடு சினிமாவிற்கு ஏற்ப பாடப்பட்டுள்ளதைக் கண்டு யாம் வியந்தோம். படத்தயாரிப்பாளர் ஒருசமயம் நமது சுவாமிகள் எழுதிய இந்தப் பாடலை கண்ணுற்றாரோ என்ற ஐயம் எமக்குள் எழுந்ததில் எந்த ஆச்சரியமும் இல்லை. எந்த அளவிற்கு இந்தப் பாடல் அனைவரையும் கவர்ந்து இழுக்கிறது என்பது இதிலிருந்தே தெரிகின்றது.

ஆகவே சுவாமிகள் பாடல்களை இயற்றும்போது அவர் அதுவாகவே இருக்கிறார் என்பது அவர் பாடல்களைக் கண்ணுறும்போது நன்றாகத் தெரிகின்றது. அனைவரும் சுவாமிகளின் பாடல்களைப் படித்து ஞானம் பெறுமாறு எல்லாம் வல்ல ஈசன் மலரடி வணங்கி இந்த உரையை முடிக்கிறோம்.

**ஜவஹர் சுவாமிகள்**

சிவனருட் செல்வர் புதூர்
அம்பத்தூர், சென்னை - 600 053.
செல் : 9884701014

## கிணகர் பிர்மஞானம்
## தத்போதம் இதழ் ஆசிரியர்

அன்புடையீர்,

தங்களின் கவிதை தொகுப்புகள் பலவற்றை நம் தத்போதம் இதழில் பிரசுரம் செய்துள்ளோம். பலரும் படித்து உணர்ந்தும் இருக்கின்றார்கள்.

"**அன்னையும் பிதாவும் முன்னறி தெய்வம்**" என்ற பழமொழிக்கிணங்க இந்த கவிதை தொகுப்பில் மிகச்சிறந்த கவிதைகளை தங்கள் தாய் தந்தையர்களுக்கு அர்ப்பணம் செய்துள்ளது மிகவும் பாராட்டுக்குரியது. இந்த மகனை (பூவில்உடையார்) பெற அவர்கள் செய்த தவம் என்று உணர்கிறோம்.

பெருமையாக இருந்த காரணத்தால் அறிவில் சிறந்த மகனை பெற்றெடுத்துள்ளார்கள். இன்றைய தினம் அவர்கள் பூவுலகத்தில் இல்லையென்றாலும், நமது வேதாந்த முறையில் அவர்கள் பூத உடல் மறைந்தாலும் அவர்கள் ஆன்மாவும் தங்களை வாழ்த்தும்.

இதுபோன்ற புத்தக வெளியீடு தொடர தங்களை வாழ்த்த வயதில்லை என்றாலும் வணங்கி மகிழ்கின்றோம்.

இப்படிக்கு
தங்கள் அன்புள்ள
**கிணகர் பிர்மஞானம்**

தத்போதம் மாத இதழ் ஆசிரியர், பாலமுருகன் நகர்,சோழவரம்,
ஆட்டந்தாங்கல், சென்னை - 67. செல் : 9444529060



ஓம் தத் சத்

தவத்திரு கந்தனேரி மௌனகுரு சுவாமிகளின் சீடர்

# தமிழ்அறிஞர் அண்ணாமலை அடிகளார்

கந்தனேரி - 635809

தவத்திரு இரா. பூவிலுடையார் சுவாமிகள், நாகவேடு ஸ்ரீமத் அமலானந்த சுவாமிகள் வேதாந்த சேவா சங்கத்தின் குருபூஜைப் பெருவிழாவில் வேதாந்தக் கருத்துக்களை பல தலைப்புகளில் அருட்பாடல்கள் மூலம் வெளிப்படுத்தியுள்ளார்கள்.

அதில் "போதும் போதும் பிறந்தது போதும்" நான் பிறந்து வளர்ந்து மடிந்தது போதும்" என்ற வரிகளில் வெட்டியான் கையால் வெந்தது போதும்"

அபயம் தரும் திருவடி ஆனந்தத் திருவடி" நிறைஞானி யார்? என்ற தலைப்பில் "அன்பே தெய்வம், அனைவரும் தெய்வம்" மங்கையர் மாட்சிமைத் தலைப்பில், இல்லத்தரசி பெருமை சொல்லி ஏற்றம் காண்போமே" இப்படி பல தலைப்புகளில் அருட்பாடல்கள் மூலம் வெளிப்படுத்தி மக்களை மகிழ்விக்கும். அறிவைப் புகட்டும் பாடல்கள் மேலும் வெளிவர தவத்திரு கந்தனேரி **மௌனகுரு சுவாமிகளின்** அருளாசி பூரணமாகக் கிடைக்கும் என்பதில் ஐயமில்லை.

நதிகள் தேசிய மயமாகி கங்கை, காவிரி இணைந்து இந்தியா உலகத்திற்கே அமைதிப்பூங்காவாக வழி காட்ட வாழ்த்தும் மௌனகுரு சுவாமிகள் சீடர்

தமிழறிஞர் **அண்ணாமலை அடிகளார்**

தேசிய விவசாய அணி தலைவர்

28/18, அண்ணா தெரு, செங்கோட்டை,

காட்பாடி, வேலூர், தமிழ்நாடு - 635809



ஓம் தத் சத்

அன்பே சிவம் - எல்லாம் அவன் செயல்

நல்ல உள்ளம் இறைவன் இல்லம்

ப்ரம்மம் ஸத்யம்

**விபு வித்யா பீடம்**

திருப்பூர் குமரன் தெரு, பாடியநல்லூர், சென்னை-52.

நமது விபுவித்யா பீடத்தின் போதகுருவும், ஞானாசிரியருமான சிவனருட்செல்வர் தவத்திரு. ஜவஹர் சுவாமிகள் அவர்கள் வழிநடத்த, சீரும் சிறப்புமாக நடந்து வருகிறது. விபுவித்யா பீடத்தின் வளர்ச்சிக்கு அரும்பாடுபட்டு வரும் தியாகச் செம்மல் **திரு. கு. தியாகராஜன் ஐயா** அவர்களின் குடும்பத்தாருக்கும், விபுவித்யா பீட அன்பர்களுக்கும் எமது நன்றியையும் வணக்கத்தையும் தெரிவித்துக் கொள்கிறோம்.

மேலும் ஆன்மிகத் தொண்டில் தம்மை அர்ப்பணித்துக் கொண்டு வாழ்ந்து வரும் ஸ்ரீமத் அமலானந்த மடத்தின் காப்பாளர் திரு. **இரா. பூவிலுடையார் சுவாமிகள்** அவர்கள் மடத்திற்கு உறுதுணையாக இருந்து கொண்டு குருவருளாலும் திருவருளாலும் வேதாந்த கருத்துக்களை எளிய முறையில் பாமரரும் புரிந்து கொள்ளும்படி பல புத்தகங்களை வெளியிட்டு இலவசமாக வழங்கி வருகிறார்கள். அன்னாரின் புத்தகங்கள் வெளிநாடு வரை சென்று ஆன்மிக அன்பர்கள் படித்து வருகிறார்கள்.

அதுபோல் "**மாதா பிதா குரு தெய்வம்**" என்ற அடிச்சுவட்டில் அன்னையின் ஞாபகார்த்தமாக இப்புத்தகம் வெளிவருவது போற்றிப் பாராட்டத் தகுந்தது. அன்னாரின் அரியசேவை நமது நாட்டுக்கும் வீட்டுக்கும் தேவையென்பதில் ஐயமில்லை. அன்னார் நீண்ட ஆயுள்பெற்று அரிய சேவை செய்து வர எல்லாம் வல்ல இறைவனை வேண்டி நிறைவு செய்கிறோம்.

நன்றி! வணக்கம்.

அன்புடன்

திரு. **மகராசன்**, M.A. (Retd. S.O)
விபுவித்யா பீடத் தலைவர்
பாடியநல்லூர்
செல் : 9840273184



ஓம் தத்சத் (ப்ரம்மம் சத்யம்)



# குரு வணக்கம்

1. குருவும்நீ திருவும்நீ அருளும்நீ அன்பும்நீயே
அருவம்நீ வேதம்நீ வித்தும்நீ சத்யம்நீயே
இருளும்நீ ஒளியும்நீ அனைத்துயிர் ஆன்மாநீயே
கருணைநீ பொருளும்நீ எனக்கு நீயேகதி.

2. எழுத்தும்நீ உயிரும்நீ கருவும்நீ உருவும்நீ
எண்ணம்நீ சொல்லும்நீ செயலும்நீ அனைத்தும்நீயே
ஆக்கம்நீ அருளும்நீ அற்பனையும் கருவியாக
ஆக்கியே எழுதவைத்தாய் ஐயனே போற்றி !!

3. பொய்யனாய் ஐம்புல கண்டனாய் நானெனும்
காயனாய் அவித்தையில் ஆழ்ந்த வீணனாய்
பேயனாய் மெய்யறிவு சாராத என்னை
மெய்யனாய் ஆக்கிட அருள்வாய் குருநாதா !!

4. அழியும் தேகத்தை ஆலயமாய் உணர்ந்திட
அழியும் மனத்தை செம்மையாய் ஆக்கிட
ஊழ்வினை மாய்ந்து உய்வினை எய்திட
வாழ்வினை உயர வைத்தாய் ஐயனே போற்றி !!

5. அன்பே இறைவன் அறிவே தலைவன்
அன்பும் அறிவும் ஆன்மா ஒன்றெனை
உணர்ந்திட உபதேசம் அருளிய வித்தகனே
உய்யவைத்தாய் மெய்யனே ஐயனே சரணம்



ஓம் தத்சத்

# எது உனக்குச் சொந்தம் ?

ராகம் : சிந்துபைரவி

சொல் மனிதா சொல் மனிதா – உனக்கு
சொந்தம் எதுவெனச் சொல் மனிதா – (சொல்)

1. சுடலை போகுமுடல் சொந்தமா ?
சொத்துச் சுகமும் சொந்தமா ?
மனைவி மக்கள் சொந்தமா ?
கனவில் கண்டதும் சொந்தமா ? – (சொல்)

2. நனவில் காண்பதும் சொந்தமா ?
மனதின் ஆசைகள் சொந்தமா ?
உன்னைச் சேர்ந்தோர் சொந்தமா ?
கானல் நீரும் சொந்தமா ? – (சொல்)

3. மூச்சு நின்றபின் பேச்செங்கே ?
பேச்சு நின்றபின் உறவெங்கே ?
அலைந்து திரிந்த மனமெங்கே ?
ஆசைக் கோட்டையின் இடமெங்கே ? – (சொல்)

4. காமம் போனால் அருள்இங்கே
குரோதம் போனால் ஒளிஇங்கே
லோபம் போனால் பரமிங்கே
கோபம் போனால் உயர்விங்கே – (சொல்)

5. பாசம் அகன்றால் சுகம் இங்கே
பண்பு வளர்ந்தால் நலம் இங்கே
அன்பு தழைத்தால் பலம் இங்கே
அறம் மிளிர்ந்தால் இறை இங்கே – (சொல்)



ஓம் தத்சத்

# அஞ்ஞானி யார் ?

ராகம் : சிந்துபைரவி

நம்முடல் மண்ணாவது திண்ணம் – முடிவில்
நம்முடன் வருவதென்ன – ( நம்முடல் )

1. குருவிபோல் சேர்த்து கோபுர மாக்கி
அரும்பாடு பட்டு பலகோடி யாக்கி
பெரும்பொருள் ஈட்டி தனவந்த னாகி
பாரினில் சாம்பலாய் வெந்துமே மடிவார் – (நம்முடல்)

2. எவருக்கும் ஈயாக் கஞ்சனு மாகி
இரக்கம் இல்லா வஞ்சகனு மாகி
ஊருக்கும் உதவா ஊதாரி யாகி
பெயருக்கு வாழ்ந்து முடிவில் மடிவார் – (நம்முடல்)

3. கோவில்குளம் சென்று புண்ணியம் தேடி
நாவில் நல்வாக்கு நாளும் வராமல்
காலமெல்லாம் பொய்யில் கயவனாய் வாழ்ந்து
காலனுக்கே இரையாகி மடிவார் முடிவில் – (நம்முடல்)

4. இறைவனை மறந்து உலகை நினைந்து
இலக்கினை விடுத்து அவித்தையில் ஆழ்ந்து
அஞ்ஞானம் தன்னை தன்னுடன் இணைத்து
மெய்ஞானம் உணரா மூடரு மாவார் – (நம்முடல்)

5. உலக வாழ்வின் உண்மை அறியார்
பலமுறை பிறந்து இறந்தும் மடிவார்
மானிட வாழ்வின் இலக்கை உணர்ந்து
மோட்சம் பெற்றிட குருவருள் பெறுவோம் – (நம்முடல்)



ஓம் தத்சத்

# திருவாசக சிவஸ்துதி

மருந்து மருந்து அருள் மருந்து
மாணிக்க வாசகர் கண்ட மருந்து – (மருந்து)

1. மருந்து மருந்து மதி மருந்து
மாசில்லாத பொன் மருந்து
திக்கெட்டும் நிறைந்த தூய மருந்து
தித்திக்கும் ஆனந்தப் பெரு மருந்து – (மருந்து)

2. மாசினைத் துடைக்கும் மா மருந்து
ஆசையை அகற்றும் அருள் மருந்து
பாபம் போக்கும் சிவ மருந்து
பாசம் அறுக்கும் நேச மருந்து – (மருந்து)

3. இருவினை களையும் கரு மருந்து
இருமை போக்கும் நய மருந்து
மாயையை வெல்லும் மாய மருந்து
தாயினும் இனிய தூய மருந்து – (மருந்து)

4. அண்டத்தி லுறையும் சிவ மருந்து
பிண்டத்தி லுறையும் ஜீவ மருந்து
சச்சிதா னந்தப் பொருள் மருந்து
சாந்தி நல்கும் நிறை மருந்து – (மருந்து)

5. நமச்சி வாயப் பொன் மருந்து
நமனை விரட்டும் நன் மருந்து
எமபயம் போக்கும் இன் மருந்து
ஆணவ மழிக்கும் உயர் மருந்து – (மருந்து)

6. தில்லையி லாடும் உரு மருந்து
அல்லல் களையும் அரு மருந்து
மன்றுள் ளாடும் மா மருந்து
என்றும் நம்மை காக்கும் மருந்து – (மருந்து)



7. மூலா தார முதல் மருந்து
ஆக்ஞா சக்ர ஒளி மருந்து
சகஸ்ரா ரத்தி லமர் மருந்து
சிவசக்தி ரூப சின் மருந்து – (மருந்து)

8. காலனை உதைத்த மெய் மருந்து
காலத்தி லுதவும் தாய் மருந்து
அன்பில் திளைக்கும் சிவ மருந்து
ஆனந்தத் தாண்டவ லீலை மருந்து – (மருந்து)

9. சிவலிங்க ஜோதி ஆன மருந்து
சிவசக்தி தத்துவ ஞான மருந்து
பஞ்சாட் சரத்தின் மூல மருந்து
நெஞ்சத் திலுறையும் நேய மருந்து – (மருந்து)

10. விடமதை யுண்ட போத மருந்து
விடைமே லேறும் நாத மருந்து
சிவஞான சொரூப வேத மருந்து
சின்மய ரூப பாத மருந்து – (மருந்து)

11. சர்ப்ப மணிந்த சத் மருந்து
சடைமுடி தரித்த சித் மருந்து
மடமை போக்கும் ஞான மருந்து
கடைவழி காட்டும் மோன மருந்து – (மருந்து)

12. வெண்மதி சூடும் ஒளி மருந்து
தண்நதி கங்கை ஓடும் மருந்து
பொன்னொளி வீசிடும் பிறை மருந்து
பொன்மன மாக்கிடும் நிறை மருந்து – (மருந்து)

13. தென்பாண்டி நாட்டுடை நல்ல மருந்து
தட்சிணா மூர்த்தி கோல மருந்து
தென்திசை நோக்கிடும் தேன் மருந்து
தவக்கோலம் பூண்ட தனி மருந்து – (மருந்து)

14. பிட்டுக்கு மண்ணைச் சுமந்த மருந்து
பிரம்படிபட்ட தேவ மருந்து
கைலாச பதியாம் கோன் மருந்து
கண்மூன்று பெற்ற ஞான மருந்து – (மருந்து)

15. இடப்பாகம் அமர்ந்த சதி மருந்து
இடரைக் களையும் பதி மருந்து
ஈசனா ரென்னும் நிதி மருந்து
பசுபதி நமக்குக் கதி மருந்து – (மருந்து)

16. அருணாச் சலமலை ஜோதி மருந்து
அரும்பெருஞ் சுடராம் ஆதி மருந்து
அருளொளி வீசிடும் தவ மருந்து
அருளைப் பொழிந்திடும் சிவ மருந்து – (மருந்து)

17. ஐந்து நிறமுடை அருள் மருந்து
அன்பின் உறைவிட திரு மருந்து
விபூதி சுந்தர சுய மருந்து
விடுதலை தந்திடும் ஜெய மருந்து – (மருந்து)

18. நாயன்மார் துதித்த நாத மருந்து
நால்வர்க் கருளைத் தந்த மருந்து
நம்முள் ளேநின் றாடும் மருந்து
நமக்கு மோட்சம் தரும் மருந்து – (மருந்து)



ஓம் தத்சத்

# விழித்திரு மனிதா !

ராகம் : சிந்துபைரவி

மனிதா மனிதா விழித்திரு மனிதா !
எமனே ஒருநாள் கொண்டுமே போவான் – (மனிதா)

1. ஆட்டமும் பாட்டமும் சிலநாள் வாழ்க்கை
கூட்டமும் ஒட்டமும் மூச்சுள்ள நாள்வரை
நீர்க்குமிழ் உடலை நீயென எண்ணாதே !
நீசேர்த்த பொருளும் உன்னோடு வாராதே ! – (மனிதா)

2. காசும் சொத்தும் கையில் இருந்தால்
வீசுவர் உனக்குச் சாமரம் கொண்டு
காசும் போனால் பாரார் உன்னை
காசினால் வருமே தீராத் தொல்லை – (மனிதா)

3. பட்டம் பதவி நிலைக்குமோ மனிதா
பசித்திரு மனிதா தனித்திரு மனிதா
விழித்திரு மனிதா அடங்கிடு மனிதா
உய்யும் பதவி அடைந்திடு மனிதா – (மனிதா)

4. பேராசை கொண்டு வாழாதே மனிதா
பேயாய் அலைந்து உழலாதே மனிதா
சுயநலங் கொண்டு பழகாதே மனிதா
பயத்தால் நடுங்கிச் சாகாதே மனிதா – (மனிதா)

5. இன்னலும் இன்பமும் இரவும் பகலும்
இன்பமும் துன்பமும் கலந்தே வருமே
அன்பின் நெஞ்சம் இறைவன் இல்லம்
அன்பும் பண்பும் ஆனந்தம் தருமே – (மனிதா)

6. சாக்கிர நிலையும் நீண்ட கனவே
சொப்பன நிலையும் குறுகிய கனவே
இரண்டு நிலையும் மெய்யாக இல்லை
இருமை கடந்திட விசாரித் தறிவாய் – (மனிதா)

7. நெருப்பில் பஞ்சும் சாம்பலும் ஆகும்
குருவின் வாக்கால் பாபமும் நசியும்
சஞ்சித கருமம் தந்திடும் வினைகள்
பஞ்சுபோல் எரிந்திட குருவருள் உதவும் – (மனிதா)

8. உள்ளதைச் சொல்லி உயர்ந்திடு மனிதா
உள்ளத்தை அன்பால் நிரப்பிடு மனிதா
இரண்டு நிலையும் மெய்யாக இல்லை
இருமை கடந்திட விசாரித் தறிவாய் – (மனிதா)

9. கற்பதைச் சீலமாய் கற்றிடு மனிதா
கற்றபின் அதன்படி நடந்திடு மனிதா
கற்றோன் என்னும் ஆணவம் அகற்றிடு
கற்றவை சிறக்க நற்செயல் ஆற்றிடு – (மனிதா)

10. இறைவன் படைப்பில் யாவரும் சமமே
எறும்பும் யானையும் ஈருடல் ஆகும்
இவற்றுள் இருந்து நடத்தும் ஈசன்
எங்கும் உள்ளான் எதிலும் உள்ளான் – (மனிதா)



11. வலியார் மெலியார் என்ற பேதமும்
நலிந்தோர் உயர்ந்தோர் என்ற பேதமும்
வேண்டாம் இனியும் வேண்டாம் மனிதா
வேண்டிய பண்பை வளர்த்திடு மனிதா — (மனிதா)

12. உள்ளொன்று வைத்துப் புறமொன்று பேசிட
உள்ளம் நஞ்சாய் மாறிடும் மனிதா
போலியாய் வாழ்ந்து புகழை நாடிட
போலிப் புகழும் கேலியாய் மாறிடும் — (மனிதா)

13. நேர்வழி சென்றிடு தர்மம் காத்திடு
நேர்மை அன்பால் பற்றறச் செயல்படு
துயரும் தொல்லையும் உனை விட்டோடும்
உயர்வும் வந்திடும் புனிதமு மாவாய் — (மனிதா)

14. காலையில் எழுந்து தியானம் செய்வாய்
பாலும் தேனும் இனிப்பது போல
பகவான் அருளை விரைவில் பெற்று
பேரின்பம் பெற்று வீடுபே ற்டைவாய் — (மனிதா)



ஓம் தத்சத்

# ஆன்மாவே மனச்சாட்சி

ராகம் : சிந்துபைரவி

உள்மனம் பேசும் உண்மைப் பொருளை
உணர்ந்திடு மனிதா உய்ந்திடும் மனிதா – (உள்மனம்)

1. ஆன்ம சொரூபம் உனது சொரூபம்
ஆன்ம நேயம் ஆத்மா னந்தம்
உள்ளும் புறமும் ஒளிரும் ஒளியே
உள்ளதை விளக்கும் ஆன்ம ஒளியே – (உள்மனம்)

2. ஆன்ம சொரூபம் ஸர்வம் சாட்சி
அன்பின் உள்ளம் அகமே காட்சி
சாட்சியின் ஒளியே விளக்கிடும் உண்மை
சாந்த நிலையில் புரிந்திடு சாதனை – (உள்மனம்)

3. விருப்பும் வெறுப்பும் தருமே தொல்லை
விருப்பும் வெறுப்பும் தருமே தோல்வி
விருப்பும் வெறுப்பும் எரித்து வாழ்வில்
விருப்பம் கொள்வாய் இறைவன் அருளில் – (உள்மனம்)

4. கோபத்தால் பாபம் வருமே உடனே
கோபத்தைப் போக்கிக் காப்பாய் பொறுமை
ஆசா பாசம் தருமே துன்பம்
ஆசான் வாக்கு தருமே இன்பம் – (உள்மனம்)

5. காமம் க்ரோதம் லோபம் மோஹம்
எமனாம் உனக்கு என்றும் பகையாம்
எமனை வென்றிட காமனை வென்றிடு
எமனும் அணுகான் இறைவனும் வருவான் – (உள்மனம்)

6. உள்ளே உன்னை உணரும் வழியாம்
உன்னை உணர்ந்திட அன்பே வழியாம்
அன்பும் சிவமும் உந்தன் வடிவம்
அன்பில் திளைத்து ஆவாய் ப்ரம்மம் – (உள்மனம்)



ஓம் தத் சத்

# நாகதேவதை ஸ்துதி



நல்ல பாம்பே ஆடு பாம்பே – நீ
நாதர் முடி மேலிருக்கும் நல்லபாம்பே – நல்ல

1. ஆதி ஷேஸன் பெயர் பெற்றாய் நல்லபாம்பே – நீ
ஆதிமுதல் நாராயணன் பஞ்சணை ஆனாய்
இராமனுக்குத் துணையாக வந்த சோதரன் – அந்த
இலக்குவனும் நீ தானே வணங்குகின்றோம் – நல்ல

2. கணநாதன் இடுப்பிலே நல்ல பாம்பே – நீ
அணிகலமாய் விளங்கிடும் நல்ல பாம்பே
ஆணவத்தை அழித்திடும் நல்ல பாம்பே – நீ
அண்டியோரைக் காத்திடுவாய் நல்ல பாம்பே – நல்ல

3. வெற்றிவேலன் காலடியில் நல்ல பாம்பே – நீ
வெற்றிபெற துணையிருப்பாய் நல்ல பாம்பே
கற்றவரும் மற்றோரும் நல்ல பாம்பே – உன்னை
சுற்றிவந்தால் நலம்தருவாய் நல்ல பாம்பே – நல்ல

4. பாற்கடலில் அமுதெடுக்க நல்ல பாம்பே – நீ
பலமுள்ள கயிறானாய் நல்ல பாம்பே
அல்லலிலே விஷம் உமிழ்ந்தாய் நல்ல பாம்பே – நீ
பல்லுயிரைக் காத்திடுவாய் நல்ல பாம்பே – நல்ல

5. நீலநிறம் உனது விஷம் நல்ல பாம்பே
நீலகண்டன் சிவ பெருமான் நல்ல பாம்பே
சிவமாக அழகு தரும் நல்ல பாம்பே – நாங்கள்
ஜெயம் பெற அருள்வாய் நல்ல பாம்பே – நல்ல

6. சிவனுக்கு அணிகலன் நல்லபாம்பே – நீ
சிவக் கோலக் காட்சியில் நல்ல பாம்பே
சிவமாக அழகு தரும் நல்ல பாம்பே – நாங்கள்
ஜெயம் பெற அருள்வாய் நல்ல பாம்பே – நல்ல

7. நாதத்திலே லயமாகும் நல்ல பாம்பே – நீ
நாதத்தின் உறைவிடம் நல்ல பாம்பே
நல்லவரைக் காத்திடுவாய் நல்ல பாம்பே – நீ
பல்வளமும் தந்திடுவாய் நல்ல பாம்பே – நல்ல

8. நேர்மைக்குச் செவி சாய்ப்பாய் நல்ல பாம்பே – நீ
நல்ல பாம்பு பெயர் பெற்றாய் நல்ல பாம்பே
நாகத்தின் தேவதை நீயல்லவோ – நீ
நன்மை செய்து எல்லோரையும் காத்திடுவாய் – நல்ல

9. நாதர்முடி மேலிருக்கும் நல்ல பாம்பே – நீ
நாதன் தாளை வணங்கிடும் நல்ல பாம்பே
நாகரத்தினம் தருவாய் நல்ல பாம்பே – நீ
நாதத்திலே ஒன்றிடுவாய் நல்ல பாம்பே – நல்ல

10. புற்றிலே குடியிருப்பாய் நல்ல பாம்பே – நீ
வற்றாத அருள்புரிவாய் நல்ல பாம்பே
காற்றினிலே உயிர்வாழ்வாய் நல்ல பாம்பே – நீ
நற்றுணையும் நீயாவாய் நல்ல பாம்பே – நல்ல

– திருச்சிற்றம்பலம் –



ஓம் தத் சத்

# எது நமக்குச் சதம் (நிரந்தரம்)

எது பந்தம் எது சொந்தம்
என்று நமக்குப் புரியல !
எது நமக்குச் சொந்தம் என்று
புரிந்து விட்டால் தேவல ! — எது

1. கடைசி வரை நம்மோடு
வருவ தெல்லாம் தெரியுமா ?
கடைசி மூச்சில் நமது மனம்
என்ன தான் நினைக்குமோ ? — எது

2. எது துன்பம் எது இன்பம்
என்று நமக்குப் புரியல
புலனின்பம் வரும்போது
நம்மை நாமே மறக்கிறோம் — எது

3. நமது மனம் நினைப்பதெல்லாம்
நமக்குச் சொந்தம் ஆகுமா ?
நாம் பேசும் பேச்செல்லாம்
நல் வழிக்குப் போகுமா ? — எது

4. ஊராரும் உற்றாரும்
கடை வழிக்கு ஆவாரோ ?
உண்மை தனைக் கண்டறியும்
உபாயத்தைச் சொல்வாரோ ? — எது

5. கோடிப் பிறவி எடுத்தும் கூட
பந்தம் இன்னும் தொலையல !
வாடி வாடி மடிந்தும் கூட
வாட்டம் இன்னும் போகல ! – எது

6. காலமெல்லாம் உண்டு தூங்கி
கழிச்சுட்டோமே வாழ்வில !
கனமான ஆசைகளை
வளர்த்திட்டோமே நெஞ்சில ! – எது

7. உறவைத் தேடி பொருளைத்தேடி
பரம்பொருளை மறந்தாச்சு
உறவெல்லாம் கடைசிவரை
உய்யும் வழிக்கு உதவுமா ? – எது

8. நாய் நரியாய் கழுதையுமாய்
பிறந்து ழன்றோம் பூமியில !
நன்மை தேடி உய்யும்வழி
நல்வழி தேடல – எது

9. பேரின்பம் நித்யானந்தம்
எப்போது வந்திடும் ?
ப்ரம்மானந்தம் ஆத்மானந்தம்
என்றுதான் நிலைத்திடும் ? – எது

10. சற்குருவை நாடுங்க
சாந்தி தரும் என்றாங்க
நாகவேடும் வந்தாச்சு
நல்வழியும் கிடைச்சாச்சு ! – எது

ஓம் தத் சத்

# ஜீவன் முக்தன் யார் ?

ராகம் : வைஷ்ணவ ஜனதோ மெட்டு

ஜீவன் முந்தன் யாரெனக் கேளீர்
உள்ளத்தில் ஆன்மாவை உணர்வானே — ஜீவன்

1. நித்திய மநித்தியம் தெளிந்திடு வானே
பற்றின்றிச் செயலைச் செய்வானே — ஜீவன்

2. இகபர சுகத்தை முற்றிலும் விரும்பான்
உண்மை உரைத்து முக்தியில் இருப்பான் — ஜீவன்

3. மனம் புத்தி சித்தத்தை தன்வயப்படுத்தி
மெய் வாய் கண்செவி காப்பானே — ஜீவன்

4. நித்திய கருமத்தில் பற்றாது இருப்பான்
காமாதி வரினும் அடக்கிக் கொள்வானே — ஜீவன்

5. சிரவணப் பொருளைச் சித்தத்தில் வைப்பான்
குருவின் உபதேசம் சிரத்தையாய் உணர்வான் — ஜீவன்

6. தேகப் பற்றும் கொள்ளவும் மாட்டான்
தேகியின் நேசம் கொள்வானே — ஜீவன்

7. ஏச்சும் பேச்சும் ஏற்றுக் கொள்வானே
மூச்சு அவனுக்கு மோட்சம் மட்டுமே — ஜீவன்

8. உடலை வளர்த்திட உண்ணவும் மாட்டான்
உயிர் வாழ சிறிது உண்டிடுவானே — ஜீவன்

9. வீடும் காடும் அவனுக்கு ஒன்றே
நாடுவ தெல்லாம் நற்செய லாகும் — ஜீவன்

10. வீண்பேச்சைத் தவிர்ப்பான் வேட்கை ஒழிப்பான்
வேண்டுவ தெல்லாம் நல்லோர் நட்பாம் — ஜீவன்

11. விருப்பு வெறுப்பில் சமமாய் இருப்பான்
விரும்புவ தெல்லாம் உயர் பணியாகும் — ஜீவன்

12. ஆணவம் கொள்ளான் அகந்தையும் கொள்ளான்
அன்பின் சொரூபம் தானென உணர்வான் — ஜீவன்

13. சாக்கிரம் அவனுக்கு அன்பின் துணையாம்
சகஜ நிஷ்டனாய் சுகம் பெறுவானே — ஜீவன்

14. உள்ளத்தின் ஆழத்தில் ஒன்றிடு வானே
உள்ளே தன்னை உணர்ந்திடு வானே — ஜீவன்

15. எல்லோர் உளத்திலும் நிறைந்திருப் பானே
எல்லா வற்றிலும் இறைவனைக் காண்பான் — ஜீவன்

16. எத்தொழில் செய்யினும் முக்தனாய் இருப்பான்
வஸ்துவில் என்றும் நிலைத்திருப் பானே — ஜீவன்



ஓம் தத் சத்

# மனோ தத்துவப் பாடல்

ராகம் : சிந்துபைரவி

மனமே சிந்தனை செய் மனமே – நீ
வந்த காரணம் சொல் மனமே – மனமே

1. நீ போன போக்கில் நான் சென்றேன்
மீளாத் துரம் நான் பெற்றேன்
நல்லன தீயன உணர வில்லை
நான்பட்ட தொல்லைக்கு எல்லை யில்லை – மனமே

2. காற்றின் அம்சம் நீ யானாய்
காற்றெனும் ஆசையில் அலைய வைத்தாய்
பற்றெனும் பாசத்தில் உழல வைத்தாய்
பற்றற எனக்கு வழி இல்லையா ? – மனமே

3. குற்றம் புரிவது உன் செயலோ
குற்றம் நீங்கிட வழி இல்லையா
பற்றற்ற ஈசனை நான் அடைய
வற்றாத அருளைப் பெறுவேனா ? – மனமே

4. உன்னை உணர்ந்திட வந்தாயா ?
என்னை மாய்த்திட வந்தாயா ?
பொன் பொருள் சேர்த்திட வந்தாயா ?
மண்ணில் மாய்த்திட வந்தாயா ? – மனமே

5. பிறவிக்கு வித்தும் நீ தானே !
பிறவா நிலையை அடைவேனா ?
உன்னைக் கொண்டே உய்வேனே !
என்னிடம் உன்பலம் பலிக்காது – மனமே

6. நித்தியம அநித்தியம் தெளிந்தாயா ?
சத்தியம் உணர்ந்திட வந்தாயா ?
சத்தில் நின்றிட வந்தாயா ?
வித்தில் ஒடுங்கிட வந்தாயா ? — மனமே

7. உன்னை அடக்கும் வழி கண்டேன்
உன்னை மாய்க்கும் பலம் கொண்டேன்
என்னுள் இருந்து எனை வீழ்த்தும்
மனமே உன்னை விட மாட்டேன் — மனமே

8. குரு உபதேசம் யான் பெறுவேன்
சிரவண மனனம் யான் செய்வேன்
சிரவணப் பொருளைச் சிந்திப்பேன்
சிரத்தையாய் தியானம் யான் செய்வேன் — மனமே

9. சத்சங்க உறவினில் கலந்தேனே
சத் பொருளாகிட பயின்றேனே
நற்பதம் அடைந்திட முனைகின்றேன்
நல்வழி பற்றிட உனைக் கொண்டேன் — மனமே

10. ஆன்மா எனது சுய சொரூபம்
அன்பும் அறிவும் நானாவேன்
அனைத்துயிர் நேசம் கொள்வேனே
அதுவே எனது பலமாகும் — மனமே

11. சகஸ்ர தளத்தில் உனை வைப்பேன்
சங்கற்ப மில்லா சிறை வைப்பேன்
சிவசக்தி யுடனே லய மாவாய்
சாந்தியில் உன்னை இருத்திடுவேன் — மனமே

12. பொன்போல நீயும் ஒளியாவாய்
விண்ணும் மண்ணும் நீ யாவாய்
ஆக்ஞா சக்கர ஒளியாவாய்
அகமும் புறமும் ஒளிர்வாயே ! — மனமே

திருச்சிற்றம்பலம்

ஓம் தத் சத்



# புனிதமான மனிதப்பிறவி

ராகம் : சிந்துபைரவி

மனிதப் பிறவி இனிய பிறவி
புனிதமான நல்ல பிறவி — மனித

1. உடல் துன்பம் மனத் துன்பம்
கடந்து வாழப் பயில்வோமே
துன்பம் நமக்குச் சொந்தமில்லை
இன்ப வாழ்வும் சொந்தமில்லை — மனித

2. பொருளில் நாட்டம் புகழில் நாட்டம்
பதவி கூட நிலைப்பதில்லை
பொருளுக்காக வருந்த வேண்டாம்
அருளுக்காக வாழ்ந்திடுவோம் — மனித

3. வானவரை மிஞ்சி விடும்
வளமான உயர்பிறவி
வானுயரும் புகழும் வேண்டாம்
வளமான மனமும் வேண்டும் — மனித

4. கானகமே சென்றிடினும்
மனதை மட்டும் ஆள்வோமே
ஊனமுடன் வாழ்ந்தாலும்
மனதில் உறுதி கொள்வோமே — மனித

5. புண்ணியத்தைச் சேர்த்தாலும்
பாபச் செயல் புரிந்தாலும்
பிறவி நீங்கி உய்ந்திட
பற்றுதலைப் போக்கிடுவோம் — மனித

6. விண்ணுலக சுகமெல்லாம்
நிலையில்லா ஆனந்தம்
வையகத்தின் வாழ்வெல்லாம்
இன்ப துன்ப உறைவிடம் — மனித

7. இன்ப துன்பம் நிலைப்பதில்லை
இவையெல்லாம் சொந்தமில்லை
இந்த உண்மை புரிந்து விட்டால்
என்றும் நமக்கு தொல்லையில்லை — மனித

8. வேதாந்தவி சாரமெல்லாம்
போதனைகள் தந்திடுமே
பேதங்கள் அகற்றிடுமே
பேரின்பம் நிலைத்திடுமே — மனித

9. அகண்ட ஜோதி ஆன்மாவை
அகத்துள் நினைந்து உணர்ந்திட
அழியும் உடலும் உதவுமே
ஆன்ம விளக்கின் தூலமே — மனித

10. நவத்துவார பாத்திரம்
நாதன் உறையும் க்ஷேத்திரம்
பஞ்ச பூத மண்ணுடலும்
பூமி ஆளும் மன்னனாம் — மனித

11. ஞானிக்கும் அஞ்ஞானிக்கும்
தூல உடல் ஒன்றாகும்
தூல உடல் அழிந்தாலும்
புகழுடம்பு அழியாது — மனித

12. இறைவன் மயம் அன்புமயம்
அன்புள்ளம் திருவுள்ளம்
சிரத்தாலே ஞானம் வரும்
கரச் சேவை உயர்வு தரும் — மனித

13. இறைவன் மயம் அன்புமயம்
அன்புள்ள திருவுள்ளம்
சிரத்தாலே ஞானம் வரும்
கரச் சேவை உயர்வு தரும் — மனித



ஓம் தத் சத்



# சம்சார சாகரம்

வாழ்வென்ற சாகரம் சம்சார சாகரம்
ஊழ்வினை தந்திடும் நெடும் பயணம் – வாழ்வு

1. பொன்னாலும் தொல்லையே பொருளாலும் தொல்லையே
மண்ணாலும் தொல்லையே பெண்ணாலும் தொல்லையே
மணவாழ்வில் தொல்லையே பணத்தாலும் தொல்லையே
கணநேரம் கூடநம்மை விடாத் தொல்லையே – வாழ்வு

2. மனைவியால் தொல்லையே மக்களால் தொல்லையே
தினம்தினம் தொடரும் தீராத தொல்லையே
மனமே நொந்திடும் மாறாத தொல்லையே
வினைகள் நசித்திடும் வழிதான் இல்லையே – வாழ்வு

3. நோயினால் தொல்லையே பகைவரால் தொல்லையே
கயவரால் தொல்லையே ஓயாத தொல்லையே
கடனால் தொல்லையே உறவால் தொல்லையே
முடிவில்லாத் தொல்லையே முதுமையிலும் தொல்லையே – வாழ்வு

4. நினைத்தது நடந்தால் மனதுக்கு இன்பம்
நிலையாத பொருளால் வருமே துன்பம்
புலனால் வருமே தற்கால இன்பம்
பாசத்தால் வருமே மீளாத் துன்பம் – வாழ்வு

5. தொல்லைக்கு எல்லையில்லை பிறப்புக்கும் முடிவில்லை
தொல்லைகள் போக்கிட யாரும் இல்லையே !
பல்கலை கற்றும்கூட பயனேதும் இல்லையே !
வல்லவ னானாலும் தொல்லையும் தீரவில்லை — வாழ்வு

6. தொல்லை நீக்கும் தந்திரம் துயரம் போக்கும் மந்திரம்
அல்லல் போக்கும் எந்திரம் ஆசைபோக்கும் சுதந்திரம்
எல்லையில்லா ஞானமே தொல்லை போக்கும் தந்திரம்
நல்வழியில் ஞானம்பெற சற்குருவின் மந்திரம் — வாழ்வு

7. ஆசாபாசம் தொல்லையாம் அன்பைமட்டும் பற்றுவோம்
நீசருடன் சேராமல் நித்திய சுகம் பெறுவோம்
சத்சங்கம் சார்ந்துமே சங்கடங்கள் போக்குவோம்
சற்குருவை நாடுவோம் நல்வழியும் தேடுவோம் — வாழ்வு

8. உலகின் தன்மை உணருவோம் உண்மைதனைப் பகருவோம்
பலஜென்பம் செய்துவந்த புண்ணியபாபம் போக்குவோம்
நல்லவழி தேடுவோம் நம்மை நாமே உணருவோம்
எல்லையிலாத் துன்பமும் நம்மைவிட்டு ஒடுமே — வாழ்வு

9. பாபங்கள் பறந்தோட நற்செயல் புரிவோம்
பற்றற்று நடந்தால் மனமும் பொன்னாகும்
பற்றற நமக்கு அன்பு ஒன்றே போதும்
பாசத்தை அறுத்தால் ஆசையும் அகலும் — வாழ்வு

10. நாமஸ்மரணம் என்றும் நம்மைக் காக்கும்
நமக்குள் இருக்கும் நாதனை உணர்த்தும்
நானென்ற ஆணவம் அழிந்துமே உயர்த்தும்
நாம்யார் என்ற தத்துவம் உணர்வோம் — வாழ்வு

11. அந்தக்கரணம் நாமல்ல அதன் செயல்கள் வேறாகும்
இந்தவிபரம் விசாரித்து இதற்கெல்லாம் சாட்சி ஆவோம்
இன்பதுன்பம் நமக்கல்ல இதையறிந்தால் நலமாமே
அன்பினாலே நமதுஉள்ளம் நிறைந்து நிற்போம் எந்நாளும் — வாழ்வு

12. மூவுடலும் நாமல்ல முக்குணமும் நாமல்ல
முக்குணமும் தாண்டியே நிற்போமே நம்நிலையில்
ஆன்மஒளி அகண்டவெளி ஆனந்த சாகரத்தில்
அமைதிகொள்வோம் பிறப்பறுப்போம் ஆனந்த மாயிருப்போம்
— வாழ்வு

— திருச்சிற்றம்பலம் —



ஓம் தத் சத்

# சர்வ தர்ம மதப்பாடல்



ஆனை முகன் வணங்குவோம்
அனைத்து மதம் போற்றுவோம்
ஏக ஜோதி ஏற்றுவோம்
இன்பமாக வாழுவோம் — ஆனை

1. சனாதன தர்மமாம் சதுர்வேத சாரமாம்
அனைத்துமத கொள்கைகளை தன்னகத்தே கொண்டதாம்
இறைவனால் தோற்றுவித்த ஆதிமதம் இந்துமதம்
என்ற உண்மை அறிந்து நாமும் போற்றுவோம் அனுதினமும் —ஆனை

2. ஏசுநாதர் போற்றுவோம் அன்புவழி செல்லுவோம்
ஏசுபிரான் சொன்னபடி நமதுவாழ்வில் செல்லுவோம்
நமதுவழி அன்புவழி என்றென்றும் சிறந்தவழி
நபிபெருமான் நடந்தவழி தர்மநெறி பற்றுவோம் — ஆனை

3. புத்தர்பிரான் காட்டும்வழி புனிதமான சிறந்தவழி
அத்தனையும் அன்புவழி அனைவருக்கும் ஏற்றவழி
சித்தமெல்லாம் நிறைந்தவழி சிறப்பான ஞானவழி
புத்தம்சரணம் கச்சாமி புத்தர்சொன்ன அமுதமொழி — ஆனை

4. சத்யம் தர்மம் சாந்தி பிரேமை
காந்தி மகான் நடந்த வழி
பொறுமை அன்பு சேவை மூன்றும்
புனிதமான தர்ம வழி — ஆனை

5. மனித நேயம் காத்திடுவோம்
புனிதத் தொண்டு ஆற்றிடுவோம்
ஒழுக்கக் கல்வி கற்றிடுவோம்
உயர்ந்த பண்பை வளர்த்திடுவோம் — ஆனை

6. அன்பு ஒழுக்கம் நேர்மை எல்லாம்
இதயம் நிறைந்த உயர்ந்த நெறி
யாவரும் நடந்திட பாரதம் உயருமே
இறையருள் பெற்றிட என்றென்றும் உதவுமே — ஆனை



ஓம் தத் சத்

# பொறுமையே தவம்

ராகம் : சிந்துபைரவி

பொறுமையே தவமாகும் – அதுவே
குருவின் வழியாகும் – பொறுமை

1. ஊனுடல் பற்று உலகியல் பற்று
உயர்வுக்குத் தடையாகும்
உண்மை அறிந்திட நம்மை உணர்ந்திட
உள்நோக்கே வழியாகும். – பொறுமை

2. காமம் க்ரோதம் லோபம் போனால்
கடைவழிக் காகிடுவோம்
மோஹம் மதமும் மாத்சர்யம் போனால்
முக்திக்கு வழியாகும் – பொறுமை

3. இனமதப் பற்று வேரோடு களைந்தால்
மனமது பொன்னாகும்
அளவற்ற பேச்சு அளவற்ற கோபம்
அழிவுக்கு வழியாகும் – பொறுமை

4. ஆத்மாபி மானம் மிகுந்து இருந்தால்
ஆனந்தம் பொங்கிடுமே
அளவான ஆசை அளவான செல்வம்
அமைதிக்கு வழி வகுக்கும் – பொறுமை

5. தன்னலம் கருதா சேவை அன்பு
தன்னை உயர்த்தி விடும்
பொன்பொருள் ஆசை உள்ளே புகுந்தால்
இன்னலும் தொடர்ந்து வரும் — பொறுமை

6. போதுமென்ற மனமும் பொன்செய் மருந்தாம்
பேராசை தீங்கு தரும்
பொறுமையே தவமாம் அன்பே சிவமாம்
பொறுமையே உயர்வு தரும் — பொறுமை

7. சினமும் ஆசையும் பாசமும் மூன்றும்
சித்தத்தைக் கலக்கி விடும்
மௌனம் ஞானம் பொறுமை மூன்றும்
மோனத்தைத் தந்து விடும் — பொறுமை

8. தவத்தால் தன்னை ரமணர் உணர்ந்தார்
தவத்தில் ஏகமானார்
தவமும் பொறுமையும் ஒரு பொருளாகும்
தவத்தில் களித்திடு வோம் — பொறுமை

9. நான்யார் என்ற தத்துவம் உணர்ந்து
நன்னிலம் பெறுவோமே
எம்மை வென்றிட நற்தவம் புரிந்து
ஏகாந்த நிலை பெறுவோம் — பொறுமை

— திருச்சிற்றம்பலம் —



ஓம் தத் சத்

# மனதுக்கு உபதேசம்

மனமே சிந்தனை செய்திடு மனமே
நேர்மைக்குப் போராடி வென்றிடு மனமே — மனமே

1. நெஞ்சில் அன்பை நிரப்பிடு மனமே
நஞ்சான எண்ணத்தை விட்டிடு மனமே
வஞ்சனைக் காரியம் செய்யாதே மனமே
வஞ்சக ரோடு பழகாதே மனமே — மனமே

2. உள்ளத்தில் ஈசனை வழிபடு மனமே
மெள்ளவே ஆசையை விரட்டிடு மனமே
உள்ளத்தைச் செம்மையாய் ஆக்கிடு மனமே
உள்ளதைப் பேசி உயர்ந்திடு மனமே — மனமே

3. மற்றோரை இகழ்ந்து பேசாதே மனமே
சுற்றத்தை மதித்து வாழ்ந்திடு மனமே
கற்றதை வாழ்க்கையில் கடைப்பிடி மனமே
பற்றெல்லாம் களைந்து செயல்படு மனமே — மனமே

4. நல்லதை உன்னிடம் பதித்திடு மனமே
அல்லவை நீக்கிச் செயல்படு மனமே
பொல்லாத காரியம் செய்யாதே மனமே
நல்லன நாடியே விழித்திரு மனமே — மனமே



5. நல்வெண்ணம் நற்செயல் புரிந்திடு மனமே
நற்சொல் உரைத்து சேவை செய் மனமே
பற்பல நன்மை செய்திடு மனமே
குற்றம் புரிவதைத் தவிர்த்திடு மனமே — மனமே

6. புகழைத் தேடி அலையாத மனமே
பொன்பொருள் ஆசையை வளர்க்காதே மனமே
பதவி மோகம் கொள்ளாதே மனமே
உதவிடு ஏழைக்கு தினமும் மனமே — மனமே

7. காலத்தை வீணாகக் கழிக்காதே மனமே
போலியாய் வாழ்ந்திட எண்ணாதே மனமே
பொய்யான வாழ்வில் வாழாதே மனமே
மெய்யன்பர் கூட்டத்தில் கூடிடு மனமே — மனமே

8. ஆணவம் கொண்டு பேசாதே மனமே
அன்பில் நாளைக் கழித்திடு மனமே
பொன்போல் உன்னை ஆக்கிடு மனமே
அன்பின் துணையைக் கொண்டிடு மனமே — மனமே

9. இங்கும் அங்கும் அலையாதே மனமே
ஏகாந்த நிலையை நாடிடு மனமே
ஆக்ஞா சக்கரத்தில் அமர்ந்திடு மனமே
ஆனந்தம் அமைதி பெற்றிடு மனமே ! — மனமே





ஓம் தத் சத்

# காலத்தின் சிறப்பு

சென்ற காலம் இனி வருமா ?
சேர்த்த செல்வம் தங்கிடுமா ? – சென்ற

1. காலம் நமது கையிலா ?
காலன் வருகை தெரியுமா ?
கனவு வாழ்க்கை நிலைக்குமா ?
கனவு உறவு உதவுமா ? – சென்ற

2. இளமைக் கால நல்லோர் நட்பு
ஏற்றம் காண உதவுமே
கற்றபடி நடந்து வாழ
உற்ற துணை யாகுமே – சென்ற

3. உண்டு தூங்கி எந்நாளும்
கண்டது தான் வாழ்க்கையா ?
பண்டைக் கால நமது மரபை
எண்ணிப் பார்க்க வேண்டாமோ ! – சென்ற

4. காலத்தில் முடித்த செயல்
கை கொடுக்கும் சமயத்தில்
நொடிப் பொழுதுக் காரியத்தால்
தேடி வரும் வெற்றிதானே ! – சென்ற

5. வீண்பொழுது போக்காதார்
வெற்றி கொள்வார் தம் வாழ்வில்
கருத்தோடு செயல் புரிவார்
காலமெல்லாம் களிப்புறுவார்




6. சான்றோரின் சரிதமெல்லாம்
சான்றுரைக்கும் என்றென்றும்
சான்றோரின் சாதனையை
சிந்தையில் வைப்போமே

7. கடவுளே தான் காலமாகும்
காலத்திற் கெல்லை யில்லை
காலத்தைக் கடந்த பொருள்
காலனையும் வென்றிடுமே ! — சென்ற

8. பகலிறவு போல் நமக்கு
பிறப் பிறப்பு தொடர்ந்து வரும்
பிறப் பின்றி ப்ரம்மமாகும்
பேர் பெறுவோம் குருவருளால் — சென்ற

9. காலத்தின் அருமை தெரிந்து
காலத்தில் நமை யுணர்வோம்
காலனென்ற எமனை வென்று
காலமென்ற பதம் பெறுவோம் — சென்ற





ஓம் தத் சத்



# ஜீவனுக்கு உபதேசம்

(காவடிச் சிந்து மெட்டு : நந்தவனத்தில் ஒரு ஆண்டி)

ஜீவனே உனக்கேது மரணம் ? உன்னை
உணர்ந்தால் இனிமேல் உனக்கேது ஜனனம் ? — ஜீவனே

1. பலஜென்ம புண்ணிய பாவம் – எல்லாம்
பற்பல பிறவியில் சேர்ந்தது இரண்டும்
மலையாகச் சேர்ந்தது குவியல் – இவற்றை
மாய்த்திடும் மார்க்கம் ஏதேனும் உண்டா ? — ஜீவனே

2. முன்ஜென்ம வினையெல்லாம் சேர்ந்து – பெரிய
மூட்டையாய் இருப்பது சஞ்சித மாகும்
நற்செயல் செய்தாலும் ஜனனம் – இதை
நன்கு அறிந்து செயல்படு வாயே — ஜீவனே

3. தீமைகள் செய்தாலும் ஜனனம் – நீ
தீர விசாரித்து வாழ்ந்திடு தினமும்
இன்பமும் துன்பமும் ஒன்றாம் – இதை
நன்கு உணர்ந்தாலே என்றென்றும் நன்றாம் — ஜீவனே

4. பேராசை இருந்தாலும் ஜனனம் – பெரும்
புண்ணியம் செய்தாலும் வருமே ஜனனம்
பிறமதம் பழித்தாலும் ஜனனம் – இந்த
பேருண்மை தெரிந்தாலே உனக்கே நன்மை — ஜீவனே



5. பிறவியில் உயர் தாழ்வில்லை – எனவே
பிறரைப் பழித்தால் வருமே ஜனனம்
அவரவர் செயலாலே உயர்வார் – நல்ல
அன்புள்ளம் கொண்டோரே உயர்குலம் ஆவார் – ஜீவனே

6. சுயநல முள்ளோரே தாழ்வார் – பெரும்
பொதுநல முள்ளோரே அடைவார் மேன்மை
நம்பிக்கை உள்ளோரே வெல்வார் – இறை
நம்பிக்கை உன்னை உயர்த்திடும் தானே – ஜீவனே

7. அண்டம் அனைத்திலும் இறைவன் – இந்த
பிண்டத்தி லுறைந்து நடத்தும் தலைவன்
அகண்டமாய் இருப்பதும் அவனே – இந்த
அண்ட சராசரம் அனைத்தும் அவனே – ஜீவனே

8. பஞ்ச பூதங்கள் அவனே – நீ
பார்க்கும் பொருளெல்லாம் அவனது சொரூபம்
பொருளுக்குள் இருப்பதும் அவனே – இந்த
அருளை வழங்கிடும் அன்பனும் அவனே – ஜீவனே

9. சரணம் அடைந்தோருக் கருள்வான் – நம்
சனாதன தர்மத்தின் மூலமும் அவனே
சதுர்வேத சாரமும் அவனே – அந்தச்
சாரத்தின் பொருளும் தர்மமும் அவனே – ஜீவனே



10. அனைத்துயிர் ஆன்மாவும் அவனே – அவன்
ஆனந்த வடிவமும் சக்தியும் அவனே
இன்னலைத் தீர்ப்பவன் அவனே – அவன்
எண்ணும் இடத்திலே வருபவன் அவனே – ஜீவனே

11. அன்பின் பூரணம் அவனே – அவன்
துன்பம் துடைத்திடும் தூயவன் அவனே
அமைதியில் குடிகொள்ளும் மெய்யன் – அவன்
ஆனந்த சாகர மூர்த்தியு மாவான். – ஜீவனே

12. எங்கும் ஒளியாய் இருப்பான் – அவன்
இருளிலும் மணியாய் விளங்கிடும் ஈசன்
இருமையும் கடந்துள்ளே இருப்பான் – அவன்
இமயம் போல் உயர்ந்து நிற்கும் பெருமான் – ஜீவனே

13. இன்பமும் துன்பமும் வேண்டாம் – அது
என்றைக்கும் தந்திடும் தொல்லையு மாகும்
இருமைக்கும் எல்லையு முண்டு – அவற்றை
பொறுமையாய் ஏற்று நடந்திடு வாயே – ஜீவனே

14. பற்றறக் கருமங்கள் செய்தால் – உன்னைப்
பற்றாது அவைகள் விலகியே போகும்
பற்றுடன் புரிந்திடும் செயல்கள் – உனக்கு
மற்றோர் பிறவிக்கு வித்தாய் முளைக்கும் – ஜீவனே

15. பற்றை ஒழித்திடும் மார்க்கம் – அது
பற்றறப் புரிந்திடும் தியாகமே வழியாம்
கீதையில் ஒதிய தத்வம் – உனக்குப்
பாதையைக் காட்டிடும் மாபெரும் யோகம் – ஜீவனே

16. தியாகத்தின் நிறைவு யோகம் – அந்த
யோகத்தின் நிறைவு ஞானமு மாகும்
ஞானத்தின் நிறைவு முக்தி – இது
ஞானியர் புகன்ற முடிவான நீதி – ஜீவனே

17. போகத்தால் வருவது துக்கம் – அது
யோகத்தின் நேரிடை எதிரியு மாகும்
பற்றாது கருமம் புரிந்தால் – அது
முற்றிலும் கரும யோகமு மாகும். – ஜீவனே

18. இச்ஜென்மம் தந்திடும் கருமம் – அது
பிராரப்த கருமம் என்பது மாகும்
அனுபவித்தால் மட்டும் மாயும் – அன்றி
ஈசனின் கருணையால் இலகுவில் குறையும் – ஜீவனே

19. சத்கர்மம் நற்கர்மம் செய்தால் – பெரும்
சங்கட துக்க நிவர்த்தியு மாகும்
சற்குருவால் சோகம் நீங்கும் – உயர்
சாந்தியும் ஞானமும் ஒருங்கே நிலைக்கும் – ஜீவனே

20. காமிய கருமம் புரிந்தால் – உன்
கருமம் தொடர்ந்து பிறவியும் வருமே
கருமத்தில் பற்றாது இருந்தால் – உன்
கருமத்தின் பலனும் அன்றே மாயும் – ஜீவனே

21. தானமும் தவமும் செய்தால் – உன்
தவத்தால் உன்நிலை மிகவும் உயரும்
தீயோர் தூற்றினால் கொள்வார் – உந்தன்
தூய்மையால் பெரும் பாபமும் அன்றே – ஜீவனே

22. ஜவாத்மா பரமாத்மா ஒன்றே – இதை
சிந்தித்து உள்ளே உணர்வாய் இன்றே
அத்வைத போதனை கேட்பாய் – நீயும்
ஆனந்த வடிவாம் ஆன்ம சொரூபம் – ஜீவனே

23. மகா வாக்ய உபதேசம் கேட்பாய் – நீயும்
மகா ஞானம் பெற்று த்யானமும் செய்வாய்
மனோ நாசம் அடையும் முடிவில் – நீயும்
முக்தியும் சாந்தியும் ஒருங்கே பெறுவாய் – ஜீவனே

24. மனமே உனது கருவி – இன்று
மனமின்றி வேறு செயலு மில்லை
மனமது லயமும் ஆனால் – நீயும்
மனமற்ற நிலையில் சாட்சியாய் இருப்பாய் – ஜீவனே

❋❋❋❋❋❋



ஓம் தத் சத்



# அனுபவ ஞானம்

1. இப்பிறவி போனால்
எப்பிறவி வாய்க்குமோ !
அப்பனை நினைக்கின்றேன்
இப்பிறவி போதுமே — இப்பிறவி

2. முற்பிறவி வாசனை
தப்பாமல் வந்ததோ
அற்பசுகம் நாடினேன்
அப்பனை மறந்தேனே — இப்பிறவி

3. நட்டம்பல பெற்றேனே
விட்டேன் பல நன்மையை
விடயசுகம் பெற்றேனே
பட்டதுன்பம் போதுமே — இப்பிறவி

4. தொட்டுவிட்டேன் தொல்லையை
மாட்டிக்கொண்டேன் மாயையில்
விட்டுவிட முயன்றேன்
கட்டுப்பட வில்லையே — இப்பிறவி

5. **கட்டுடலும் பிண்டமாம்**
**சுட்டெரித்தால் சாம்பலே**
**சுட்டமண்ணும் பாண்டமாம்**
**போட்டுடைத்தால் நாசமே** — இப்பிறவி

6. உடலுக்குள் உறைந்திடும்
விடமுண்டான் தரிசனம்
திடமுடன் அடைந்திடும்
கடைவழி கண்டேனே — இப்பிறவி

7. நட்டகல்லை நம்பினேன்
நட்டகல்லும் காட்டிய
வெட்டவெளி ரகசியம்
பட்டயம் போல் ஆனதே — இப்பிறவி

8. **பட்டினத்தார்** சொன்னபாடம்
கேட்டிடுவோம் அன்றாடம்
இட்டமுடன் நித்தம் நித்தம்
கேட்டபடி செல்வோமே — இப்பிறவி

9. நர்த்தனம் புரிந்திடுவான்
நடராஜன் நம்முள்ளே
கடந்துள்ளே நின்றாலே
விடமுண்டான் ஆகலாம் — இப்பிறவி

10. சுழிமுனைக் காட்சி
களிப்பினைத் தந்திடும்
ஒளியைக் கடந்திட்டால்
வெளியில் நாமாவோம் — இப்பிறவி





ஓம் தத் சத்

# தொண்டுள்ளம் இறைவன் இல்லம்

ராகம் : சிந்து பைரவி

தொண்டே நமது பண்பாடாம் – நாம்
தொண்டின் மகிமை அறிவோமே – தொண்டே

1. பஞ்ச பூத மண்ணுடலும்
பகவான் தந்த பரிசாகும்
தொண்டே நமது இலட்சியமாம்
தொன்று தொட்ட பண்பாடாம் – தொண்டே

2. ஆகாயம் வாயு தேயுவாம்
அப்பு ப்ருதிவி பூதங்களாம்
இவைகள் தந்திடும் நற்சுகமே
என்றும் நம்மைக் காத்திடுமே – தொண்டே

3. ஆகாய மின்றி சப்தமு மில்லை
வாயு மின்றி மூச்சும் இல்லை
தேயு இன்றி ஒளியுமில்லை
அப்பு இன்றிப் பயிருமில்லை – தொண்டே

4. மண்ணும் இன்றி தரணியும் இல்லை
விண்ணும் இன்றி எதுவு மில்லை
தொண்டு செய்வது பஞ்ச பூதங்கள்
தொண்டு மின்றி நாமு மில்லை – தொண்டே

5. பஞ்ச பூதத் தொண்டுகளை
கொஞ்சம் கூட மறவோமே
பஞ்ச பூத நம்முடலும்
பகவான் உறையும் உறைவிடமே — தொண்டே

6. கண்ணன் சொன்ன கீதையே
கடைவழி காட்டும் பாதையே
பற்றற்ற கருமம் யோகமே
பற்றற்ற மனிதன் தியாகியே — தொண்டே

7. பற்றற்ற செயலும் தூய்மையே
பற்றற்று வாழ்ந்தால் தெய்வமே
பற்றற்ற மனமே தூய்மையாம்
குற்றமில்லாத பெருவாழ்வாம் — தொண்டே

8. தொண்டு மனமே அன்புமயம்
தொண்டர் உள்ளம் சிவமயமாம்
தொண்டுக்கீடு எதுவுமில்லை
தொண்டில்லாமல் அருளுமில்லை — தொண்டே

9. தனக்கென்று வாழ்ந்தால் விலங்கினமாம்
தன்னையே தந்தால் ஈஸ்வரனாம்
பிறர் நலம் பேணுதல் மனிதகுலம்
பொறாமை வந்தால் அசுரகுலம் — தொண்டே

10. இயற்கை செய்யும் தொண்டுகளை
என்றென்றும் நாம் மறவோமே
நன்றிக் கடனும் நமக்குண்டு
நல்லன செய்வது நமது கடன் — தொண்டே

11. கோபுரம் கட்டினோர் உயர்ந்தோரே
குளத்தை வெட்டினோர் சிறந்தோரே
நதியை வெட்டினோர் நல்லோரே
நல்லன புரிந்தால் உயர்குலமே. — தொண்டே

12. தொண்டில்லாமல் நாமில்லை
தொண்டால் இன்று வாழ்கின்றோம்
தொண்டே நமது பண்பாடாம்
தொண்டு செய்து மகிழ்வோமே — தொண்டே

13. குருவின் வாக்கு அருள்வாக்கு
குருவின் தொண்டு பெருந்தொண்டு
அனைத்துச் சேவை குரு சேவை
அடியார் சேவை சிவசேவை — தொண்டே





ஓம் தத் சத்

# இலட்சியப் பிரார்த்தனை

ராகம் : சிந்து பைரவி

வேண்டும் எனக்கு குருவருள் வேண்டும்
வேண்டும் வேண்டும் திருவருள் வேண்டும் – வேண்டும்

1. வேண்டும் எனக்கு நிம்மதி வேண்டும்
வேண்டும் வேண்டும் அமைதி வேண்டும்
வேண்டும் வேண்டும் சாந்தி வேண்டும்
வேண்டும் வேண்டும் நற்கதி வேண்டும் – வேண்டும்

2. வேண்டும் எனக்கு சற்குரு வேண்டும்
வேண்டும் வேண்டும் சத்சங்கம் வேண்டும்
வேண்டும் வேண்டும் பொற்பதம் வேண்டும்
வேண்டும் முடிவில் நற்பதம் வேண்டும் – வேண்டும்

3. வேண்டும் எனக்கு நன்மனம் வேண்டும்
வேண்டும் வேண்டும் பொன்மனம் வேண்டும்
வேண்டும் வேண்டும் பொன்னடி வேண்டும்
வேண்டும் எனக்குத் திருவடி வேண்டும் – வேண்டும்

4. வேண்டாம் தீயோர் உறவும் வேண்டாம்
வேண்டாம் காமம் கோபம் வேண்டாம்
வேண்டும் நல்லோர் உறவும் வேண்டும்
மீண்டும் பிறவா வரமும் வேண்டும் – வேண்டும்



5. வேண்டாம் எனக்கு வெறுப்பு வேண்டாம்
வேண்டாம் வேண்டாம் விருப்பு வேண்டாம்
வேண்டாம் எனக்குப் பேராசை வேண்டாம்
வேண்டும் வேண்டும் சமநிலை வேண்டும் – வேண்டும்

6. வேண்டும் எனக்குப் பக்தி வேண்டும்
வேண்டும் வேண்டும் ஞானம் வேண்டும்
வேண்டும் வேண்டும் யோகம் வேண்டும்
வேண்டும் ஆன்ம போதம் வேண்டும் – வேண்டும்

7. வேண்டும் எனக்குச் சத்யம் வேண்டும்
வேண்டும் வேண்டும் தர்மம் வேண்டும்
வேண்டும் வேண்டும் தூய்மை வேண்டும்
வேண்டும் வேண்டும் ஆனந்தம் வேண்டும் – வேண்டும்

8. வேண்டும் உள்ளத்தில் அன்பு வேண்டும்
வேண்டும் என்றும் பொறுமை வேண்டும்
வேண்டும் மனதில் அமைதி வேண்டும்
வேண்டும் எனக்கு முக்தி வேண்டும் – வேண்டும்

9. வேண்டாம் எனக்கு அஞ்ஞானம் வேண்டாம்
வேண்டும் வேண்டும் மெய்ஞானம் வேண்டும்
வேண்டம் வேண்டாம் பேதம் வேண்டாம்
வேண்டும் எனக்குப் பேரின்பம் வேண்டும் – வேண்டும்

– திருச்சிற்றம்பலம் –



ஓம் தத் சத்

# அன்பே மோட்சம்

ராகம் : சிந்து பைரவி

மனிதா மனிதா பகவானை நினைந்து
ஊழ்வினை போக்கி உய்வாய் மனிதா — மனிதா

1. நித்திய மநித்தியம் தெளிந்திடு மனிதா
சத்திய வழியில் சென்றிடு மனிதா
நிலையில்லா உலகில் நிலையான அன்பில்
நிலைத்து நின்று செயல்படு மனிதா — மனிதா

2. தூல உடலும் நீயல்ல மனிதா
சூக்கும உடலும் நீயல்ல மனிதா
காரண உடலும் நீயல்ல மனிதா
கருவின் பொருளும் நீதான் மனிதா — மனிதா

3. பாசம் பற்று பேராசை யாலே
பந்தமும் வந்து வேதனை தருமே
சொந்தம் எதுவென சிந்தனை செய்வாய்
பந்தம் அகன்றிட பகவானை நினைவாய் — மனிதா

4. பேராசை யாலே கௌரவர் மாண்டனர்
பற்றற்று வாழ்ந்த பாண்டவர் வென்றனர்
படைபலம் தோற்றது அருட்பலம் வென்றது
கடைவழி உபதேசம் வெற்றியைத் தந்தது — மனிதா



5. அன்பே உனக்கு உறுதுணை யாகும்
அன்பின் வழியே உயர்வழி யாகும்
அன்பில் திளைத்து புனிதமும் ஆவாய்
அன்பெனும் ஈசனை அடைக்கலம் புகுவாய் – மனிதா

6. அன்பின் சேவை ஆற்றலைத் தருமே
அன்பின் செயலே பற்றற்ற நிலையே
அன்புக் கீடு எதுவு மில்லை
அன்பினால் அகலும் தீராத் தொல்லையே – மனிதா

7. உயிரினம் அனைத்தும் ஈசன் மயமே
உயிருள் உறையும் ஈசனும் அவனே
அனைத்துயிர் எல்லாம் ஈசன் வசமே
அன்பில் வாழ்ந்து உயர்வாய் தினமே – மனிதா

8. உற்றார் உறவினர் ஓடும் மேகமே
சுற்றமும் மற்றோர் உறவும் போகுமே
கற்றவை எல்லாம் கூடவே வருமோ
பற்றற்ற வாழ்க்கை இறையருள் தருமே – மனிதா

9. அத்வைத தத்வம் பேதம் களைவது
தத்துவ மஸியும் உபதேச மாகும்
அஹம்–ப்ரம் மாஸ்மி அனுபவ உணர்வு
அஹத்தில் உணர்வது ஆன்மா வாகும் – மனிதா

9. அன்பே தெய்வம் ஆன்மா தெய்வம்
அன்பே மோட்சம் அறிவே அனைத்தும்
அன்பில் வாழ்ந்து அபேத நிலையில்
அன்பில் திளைத்து ஆவாய் ப்ரம்மம் – மனிதா



ஓம் தத் சத்

# ஞான வைராக்கியம்



ராகம் : தர்பாரி கானடா

போதும் போதும் பிறந்தது போதும் – நான்
பிறந்து வளர்ந்து மடிந்தது போதும் – போதும்

1. எண்ணிலாப் பிறவி எடுத்தது போதும்
மண்ணில் பிறந்து மாண்டது போதும்
மண்ணுடல் பெற்று மாய்ந்தது போதும்
விண்ணோர் பிறவியும் எடுத்தது போதும். – போதும்

2. புல்லாய் முளைத்துக் காய்ந்தது போதும்
அல்லலில் உழன்று வாழ்ந்தது போதும்
பல்வினைத் தொல்லை பெற்றது போதும்
பலஜென்மம் வாழ்ந்து வெந்தது போதும். – போதும்

3. தீயோர் சொல்லைக் கேட்டது போதும்
தாயின் கருவில் வளர்ந்தது போதும்
பொய்யான வாழ்வில் வாழ்ந்தது போதும்
பொய்மை உறவில் களித்தது போதும். – போதும்

4. மனைவி மக்களாய் வாழ்ந்தது போதும்
மனையென சொத்தென சேர்த்தது போதும்
பொன்பொருள் குவித்து அழித்தது போதும்
பன்முறை அல்லல் பட்டது போதும். – போதும்






5. நோய்நொடி வந்து நொந்தது போதும்
நாய்போல வாழ்ந்து நலிந்தது போதும்
பேய்போல் அலைந்து திரிந்தது போதும்
காய்போல் காய்த்து உதிர்ந்தது போதும். – போதும்

6. **கட்டுடல் பெற்று வாழ்ந்தது போதும்**
**பட்டுடை உடுத்திக் களித்தது போதும்**
**மட்டிலா இன்னல் அடைந்தது போதும்**
**வெட்டியான் கையால் வெந்தது போதும்** – போதும்

7. தூல உடலை நானென் றதுபோதும்
மலதோ சத்தால் மாய்ந்தது போதும்
அலையெனும் ஆசையில் அழிந்தது போதும்
மலையெனும் மாயையில் உழன்றது போதும் – போதும்

8. அழியும் உடலைச் சுமந்தது போதும்
பழியும் பாபமும் ஏற்றது போதும்
பாழும் நரகில் விழுந்தது போதும்
சூழும் வினையால் மடிந்தது போதும் – போதும்

9. அஞ்ஞான வாழ்வில் வாழ்ந்தது போதும்
அன்பில்லா வாழ்வில் கழித்தது போதும்
கணக்கில்லா நூலைக் கற்றது போதும்
கண்களின் பயனை மறந்தது போதும் – போதும்

10. உடலின் புனிதம் அழித்தது போதும்
உண்மை நிலையை இழந்தது போதும்
செவியின் அருமை மறந்தது போதும்
வாயின் பெருமை மறந்தது போதும் – போதும்

11. மனம்போன போக்கில் போனது போதும்
கனமான ஆசையை வளர்த்தது போதும்
இனமத வெறியைக் கொண்டது போதும்
கனவெனும் வாழ்வில் களித்தது போதும் – போதும்

12. உறவை நம்பி வாழ்ந்தது போதும்
பறவை போலப் பறந்தது போதும்
இனமத வெறியைக் கொண்டது போதும்
கனவெனும் வாழ்வில் களித்தது போதும் – போதும்

13. **நனவில் வாழ்ந்த கனவும் போதும்**
**கனவில் கண்ட வாழ்வும் போதும்**
**வினையால் விளைந்த இருமையும் போதும்**
**புனைந்த வாழ்வின் விளைவும் போதும்** – போதும்

14. இருமையில் உழன்று வாழ்ந்தது போதும்
உருவில் மயங்கி நின்றது போதும்
பொறாமை நோயில் உழன்றது போதும்
மறுமையின் மயக்கம் கொண்டது போதும் – போதும்

15. தீயன வற்றைக் கண்டது போதும்
வயிற்றை வளர்க்க உண்டது போதும்
கையால் செய்த பாபம் போதும்
வாயால் சொன்ன பொய்யும் போதும் — போதும்

16. நடந்த கால்களும் தேய்ந்தது போதும்
நாக்கு ருசியும் கண்டது போதும்
நரியாய் காட்டில் அலைந்தது போதும்
பரியாய் ரோட்டில் பாய்ந்தது போதும் — போதும்

17. கயிற்றில் பாம்பைக் கண்டது போதும்
கானலை நீராய்க் கண்டது போதும்
கட்டையில் கள்வனைக் கண்டது போதும்
மாயையில் மயங்கி மாண்டது போதும் — போதும்

18. கண்டதும் மயங்கி மாய்ந்தது போதும்
உண்டென நம்பி களித்தது போதும்
கண்டன கண்டு அழிந்தது போதும்
மீண்டும் மீண்டும் பிறந்தது போதும் — போதும்

19. வேண்டும் வேண்டும் சத்சங்கம் வேண்டும்
வேண்டும் வேண்டும் சாந்தியும் வேண்டும்
வேண்டும் வேண்டும் குருவருள் வேண்டும்
மீண்டும் பிறவா வரமும் வேண்டும் — போதும்

— திருச்சிற்றம்பலம் —



ஓம் தத் சத்

# வெண்ணிலாப் பாடல்

ராகம் : சிந்துபைரவி

வெண்ணிலாவே வெண்ணிலாவே பொன்னொளியே – நீ
வந்தவண்ணம் என்னவென்று சொல்லுவாயே – வெண்ணிலவே

1. நட்சத்திரம் போலே வெண்ணிலாவே – நீ
நடுநெற்றி ஒளிர்ந்திட வந்தாயே
வானத்தில் ஒளிவீச வந்தது போல் – நீ
வனப்புடன் உள்ளே ஒளியானாய் – வெண்ணிலாவே

2. கதிரவன் போலே வெண்ணிலாவே – நீ
கடந்துள்ளே ஒளிவீசி நின்றாயே
காலத்தைக் கடந்த பேரொளியே – நீ
கருணையின் வடிவம் நீயல்லவோ – வெண்ணிலாவே

3. பொன்போலே ஒளிவீசும் வெண்ணிலாவே – நீ
பொன்னம்பல மேட்டிலே ஒளிர்வாயே
புதுப்புது பொலிவுடன் திகழ்வாயே – நீ
பத்மபாதச் சுடர்எம்மை ஆள்வாயே – வெண்ணிலாவே

4. சக்கரம்போல் வானிலே வெண்ணிலாவே – நீ
சுற்றிச்சுற்றிச் சுழலுவாய் வெண்ணிலாவே
தில்லையிலே ஆடிடும் வெண்ணிலாவே – நீ
தொல்லைநீக்கி அருள்வாய் வெண்ணிலாவே – வெண்ணிலாவே

5. பொன்னம்பலம் எம்முள்ளே வெண்ணிலாவே – ஞான
பொற்பாதமும் எம்முள்ளே வெண்ணிலாவே
நற்பதமும் எம்முள்ளே வெண்ணிலாவே – நீ
நர்த்தனமும் ஆடிடுவாய் வெண்ணிலாவே – வெண்ணிலாவே

6. சிவபதம் எம்முள்ளே வெண்ணிலாவே – ஞான
சிவபோதம் எம்முள்ளே வெண்ணிலாவே
சாம்பசிவம் எம்முள்ளே வெண்ணிலாவே – எங்கள்
சற்குருவும் எம்முள்ளே வெண்ணிலாவே – வெண்ணிலாவே

7. ஆத்மபோதம் எம்முள்ளே வெண்ணிலாவே – என்றும்
ஆனந்தம் பொங்கிடும் வெண்ணிலாவே
சச்சிதா னந்தம்நீ வெண்ணிலாவே – நீ
சாந்திநல்கும் தந்திரம் வெண்ணிலாவே – வெண்ணிலாவே

8. சொந்தபந்தம் போக்கிடும் வெண்ணிலாவே – நீ
நொந்தவரைக் காத்திடுவாய் வெண்ணிலாவே
வந்தனங்கள் செய்திடுவோம் வெண்ணிலாவே – நீ தான்
சொந்தமென்று த்யானம் செய்வோம் வெண்ணிலாவே – வெண்ணிலாவே

9. வெண்மைநிறம் ஆனதென்ன வெண்ணிலாவே – நீ
உண்மைசொல்ல வந்தனையோ வெண்ணிலாவே
உள்ளும்புறம் ஒளிர்வாயே வெண்ணிலாவே – நீ
ஒரெழுத்தாய் ஆனதென்ன வெண்ணிலாவே – வெண்ணிலாவே

10. பற்பல வண்ணமாய் வெண்ணிலாவே – நீ
பொற்கொடியாய் மின்னுவதேன் வெண்ணிலாவே
பச்சைவண்ணம் கருநீலம் வெண்ணிலாவே – நீ
நாதமுடன் பிந்துவானாய் வெண்ணிலாவே – வெண்ணிலாவே

11. எண்ணிறந்த கழலுடன் வெண்ணிலாவே
கண்காணா சக்கரம் நீயல்லவோ
நாதர்முடி மேலிருக்கும் வெண்ணிலாவே – நீ
நாதமுடன் பிந்துவானாய் வெண்ணிலாவே – வெண்ணிலாவே

12. ஜோதியான சுயம்புவே வெண்ணிலாவே – இந்த
ஜகமெல்லாம் ஒளிர்ந்திடும் வெண்ணிலாவே
மாமுனிவர் துதித்திடும் வெண்ணிலாவே – நீ
மஹாஜோதி நீ யாவாய் வெண்ணிலாவே – வெண்ணிலாவே

13. வேதம் ஏற்றிடும் வெண்ணிலாவே – ஆன்ம
போதம் தந்திடும் வெண்ணிலாவே
ஆனந்தம் நல்கிடும் வெண்ணிலாவே – நீ
அந்தரங்க சேதிசொல்வாய் வெண்ணிலாவே – வெண்ணிலாவே

14. ஆக்ஞா சக்கரத்தில் வெண்ணிலாவே – நீ
அமர்ந்தருள் புரியும் வெண்ணிலாவே
சகஸ்ர தளத்தில் வெண்ணிலாவே – நீ
சிவசக்தி ஆனாய் வெண்ணிலாவே – வெண்ணிலாவே

15. அண்டத்தில் நிறைந்த வெண்ணிலாவே – நீ
பிண்டத்தில் உறையும் வெண்ணிலாவே
மண்டலம் ஈரெழும் வெண்ணிலாவே – இந்த
விண்வெளியில் ஒளிவீசும் வெண்ணிலாவே – வெண்ணிலாவே

16. நிலவுக்கு ஒளிதரும் வெண்ணிலாவே – நீ
நித்யானந்த சொரூபம் வெண்ணிலாவே
சத்தியப் பொருளாவாய் வெண்ணிலாவே – நீ
முக்தியும் தந்திடுவாய் வெண்ணிலாவே – வெண்ணிலாவே

---



ஓம் தத் சத்

# நாம் யார் ?

ராகம் : சிந்துபைரவி

ஆன்ம சொரூபமே நாம் ப்ரம்ம சொரூபமே நாம்
ஆனந்தமே ஜோதி சொரூபமே – ஆன்ம

1. அன்னமயம் நாமல்ல பிராணமயம் நாமல்ல
மனோமயம் நாமல்ல விஞ்ஞான மயம் நாமல்ல
ஆனந்தகோசம் நாமல்ல பஞ்சகோசம் நாமல்ல
ஆனந்தம் விளங்கிடும் ஆன்மசொரூபம் நமது சொரூபம் – ஆன்ம

2. வினைபுரியும் கர்மேந்திரியம் இயக்குவிக்கும் ஞானேந்திரியம்
கனவிலும் நனவிலும் அசைந்திடும் பஞ்சவாயு
மனம்புத்தி சித்தமான அந்தக்கர்ண கருவிகளும்
நாமல்ல நாமல்ல நமது சொரூபம் ஆன்மசொரூபம் – ஆன்ம

3. ஊனுடலும் நாமல்ல மனைவிமக்கள் நாமல்ல
ஊராரும் நாமல்ல உற்றாரும் நாமல்ல
சுற்றமும் நாமல்ல மற்றோரும் நாமல்ல
கற்றோரும் நாமல்ல நமது சொரூபம் ஆன்ம சொரூபம் – ஆன்ம

☆☆☆☆☆

ஓம் தத் சத்

## குரு வாக்கு



மனத்தை அடக்கிய மகான்களின்
சன்னிதானமே அல்லலுறும்
மனிதனுக்கு ஆறுதலளித்து
வாழ வழி காட்டுகிறது.

நனவில் வாழ்ந்த கனவும் போதும்
கனவில் கண்ட வாழ்வும் போதும்
வினையால் விளைந்த இருமையும் போதும்
புனைந்த வாழ்வின் விளைவும் போதும்

* * * * * *

## பகவான் ஸாயி காயத்ரி மந்த்ரம்

ஓம் ஸாயீஸ்வராய வித்மஹே
ஸத்ய தேவாய தீமஹி
தந்நோ சர்வ ப்ரசோதயாத் :

ஓம் ஸாயிராமாய வித்மஹே
ஆத்மா ராமாயதீமஹி
தந்நோ பாபா ப்ரசோதயாத் :

* * * * * *



ஓம் தத் சத்

# அமைதியே தவபலம்

ராகம் : ஆபேரி



அமைதியே தவ பலமாம் – மன
அடக்கமே உயர் தவமாம்

1. டம்பம் பெருமை ஆணவம் மிகுந்தால்
துன்பம் தொடர்ந்து நிம்மதி கெடுமே
பிறரும் புகழ்ந்திட வாழ நினைத்தால்
வறுமையும் தொல்லையும் வாட்டி விடுமே – அமைதியே

2. பேதம் இருந்தால் ஞானமும் தூரமே
பேதம் களைந்தால் இன்பமும் நிலைக்குமே
இனவெறி மதவெறி தலைக்கேறி நின்றால்
ஊனமும் உள்ளத்தில் புகுந்து விடுமே – அமைதியே

3. தன்குறை கண்டு களைவது உயர்வு
பிறர்குறை கண்டு இகழ்வது தாழ்வு
தன்போல் பிறரை மதிப்பது சிறப்பு
தன்னிடம் இறைவனைக் காண்பது முடிவு – அமைதியே

4. மாசுள்ள மனத்தில் அஞ்ஞானம் வளரும்
மாசில்ல இதயத்தில் ஞானம் நிறையும்
அன்பில்லா நெஞ்சம் நஞ்சால் நிரம்பும்
அன்புள்ள நெஞ்சம் ஞானத்தில் திளைக்கும் – அமைதியே

5. வீண்பேச்சு நமது தவத்திற்குப் பகையாம்
காண்பவை யாவும் ப்ரம்ம சொரூபம்
உண்மை உணர்ந்தால் பிரம்மம் ஆவோம்
காண்போம் உள்ளே இறைவன் சொரூபம் – அமைதியே

6. உற்றார் மற்றோர் அனைவரும் நம்மவர்
பற்றை யொழித்தால் அனைத்தும் புரியும்
கற்றவை கேட்டவை சீராய்ப் பயன்பட
நற்றுணை யாவது குரு உபதேசம் – அமைதியே

7. எதிலும் இறைவன் நிறைந்து உள்ளான்
எறும்பில் உறையும் இறைவனைக் காண்போம்
அனைத்துயிர் புனிதம் உணர்வோம் தினமும்
ஆன்ம நேயம் வளர்ப்போம் நாளும் – அமைதியே

8. வால்மிகி உள்ளத்தில் இராமனைக் கண்டான்
வாழ்வின் உண்மையைத் தன்னிடம் கண்டான்
அனுமான் இராமன் நட்பைக் கொண்டான்
அன்பின் சேவையால் இராமனு மானான் – அமைதியே

9. அமைதியின் ஆழத்தில் உணர்வோம் நம்மை
அமைதியில் ஆன்ம தரிசனம் பெறுவோம்
ஆனந்தம் நமது இயல்பான நிலையாம்
அறிவாய் விளங்கும் ஆன்மாவில் நிலைப்போம் – அமைதியே

✰✰✰✰



ஓம் தத் சத்

# திடஞானி யார்



மெட்டு : நந்தவனத்தில் ஓர் ஆண்டி

1. திடஞானி அனுபவம் கேட்போம் – அவர்
கடவுளை உள்ளத்தில் மறவாமல் நினைப்பார்
இடர் ஏது வந்தாலும் கலங்கார் – அவர்
திடமுடன் உறுதியாய் என்றும் இருப்பார் – திடஞானி

2. உடற்பற்று இன்றியே வாழ்வார் – அவர்
கடமையைப் பற்றின்றிச் செய்துமே முடிப்பார்
மடமை அவரிடம் இல்லை – அவர்
உடமையில் மயங்கி மாய்வதும் இல்லை – திடஞானி

3. தூய்மையின் உறைவிடம் அவரே – அவர்
பொய்மை உறவை விரும்பார் கணமும்
மெய்யன்பர் சகவாசம் கொள்வார் – என்றும்
மெய்ப் பொருள் தன்னில் ஒன்றிடுவாரே. – திடஞானி

4. நானென்ற ஆணவம் கொள்ளார் – அவர்
நற்பல பணியும் ஆற்றிடுவாரே
சொற்படி நடந்திடு வாரே – அவர்
சோகத்தைப் போக்கி சுகம் பெறுவாரே. – திடஞானி

5. ஆனந்த சொரூபம் அவரே – அவர்
ஆன்மாவைத் தன்னுள் உணர்ந்திடு வாரே
அன்புடன் நாளைக் கழிப்பார் – அவர்
அறிவு சொரூப சாக்ஷியாய் இருப்பார் – திடஞானி

6. உலகத்தோர் உயர்ந்திட உழைப்பார் – அவர்
உலகத்தில் பற்றுக் கொள்வதும் இல்லை
பலகலை கற்றிருந் தாலும் – அவர்
நிலையில்லா வாழ்வை நன்கு அறிவார் – திடஞானி

7. அற்புதம் நிகழ்ந்தாலும் மயங்கார் – இறை
பொற்பத நாட்டத்தில் எப்போதும் இருப்பார்
அற்ப சுகத்தை விரும்பார் – அவர்
கற்றதை வாழ்வில் கடைப்பிடிப்பாரே – திடஞானி

8. பொன்போல் அவரது மனமும் – நாளும்
இன்பத்தில் என்றும் மலர்ந்தே இருக்கும்
பொன்பொருள் நாட்டமும் கொள்ளார் – அவர்
தன்னிலை உணர்ந்து தானாய் இருப்பார் – திடஞானி

9. பேதங்கள் அவரிடம் இல்லை – அவர்
வேதாந்த சாரத்தை நன்கு அறிவார்
வெறுப்பும் விருப்பும் இல்லை – அவர்
கருணையின் சிகரமாய் உயர்ந்திருப்பாரே – திடஞானி

10. தத்துவம் கற்றிருந் தாலும் – தன்னை
வித்தகன் என்று சொல்வதும் இல்லை
மித்தையாய் உலகத்தைக் காண்பார் – அவர்
மெத்தவே அனுபவ ஞானியு மாவார் – திடஞானி

11. அனைத்திலும் இறைவனைக் காண்பார் – அவர்
அமைதியின் ஊற்றாய் என்றும் இருப்பார்
அச்சமும் கொஞ்சமும் கொள்ளார் – அவர்
ஆனந்த வெள்ளத்தில் மூழ்கியும் இருப்பார் – திடஞானி

12. சாந்தமும் சீலமும் இருக்கும் – உயர்
சாந்தியும் பொறுமையும் அவரிடம் இருக்கும்
தவநிலை அவரிடம் தவழும் – உயர்
தவத்தின் சிகரமாய் அமர்ந்தி ருப்பாரே – திடஞானி



ஓம் தத் சத்



# கோபமே பாபம்

கோபமே பாபம் பாபமும் தொடரும்
கோபம் போக்கி நம்மை உணர்வோம்

1. பிறஉயிர் அனைத்திலும் ஈசன் உள்ளான்
பிறர்மனம் நோகச் செய்வது பாபம்
ப்ரம்மம் அனைவரும் என்பதை அறிவோம்
ப்ரம்மம் ஆதிட கோபம் தவிர்ப்போம் – கோபமே

2. சிறுசிறு கோபம் பாபத்தைச் சேர்த்திடும்
சினமும் ஆசையும் நம்மை அழித்திடும்
சிந்தனை செய்தால் கோபமும் தணிந்திடும்
சேவை அன்பால் சினமும் அகன்றிடும் – கோபமே

3. கோபத்தால் ஞானமும் தவமும் கெடுமே
காமம் க்ரோதம் தந்திடும் பிறவிகள்
குருவின் உபதேசம் நினைவில் வைப்போம்
குருவழி பற்றிப் பிறவியை அறுப்போம் – கோபமே

4. சத்சங்க உறவில் அனுதினம் கழிப்போம்
சாதனை செய்து கோபம் தவிர்ப்போம்
வேதாந்த சாரத்தை நினைவில் வைப்போம்
விவேகமும் தவமும் நம்மை உயர்த்திடும் – கோபமே

5. ஆணவம் அகற்றி அறிவை உணர்வோம்
அன்பும் அறிவும் நமது இயல்பாம்
ஆத்மா அறிவு நமது சொரூபம்
ஆத்மாவை உணர்வது நமது இலக்காம் – கோபமே

6. இராவணன் கோபம் குலத்தை அழித்தது
கௌரவர் ஆசையால் அனைவரும் மாண்டனர்
பாண்டவர் பொறுமையால் போரில் வென்றனர்
பொறாமை கோபம் அனைத்தையும் அழித்திடும் — கோபமே

7. அரைநொடிக் கோபம் அன்பை முறித்திடும்
அன்பை வளர்த்து ஆனந்தம் அடைவோம்
அன்பில்லாச் சாதனை பண்படா நிலமே
அன்பின் சாதனை ஈசனின் பாதமே — கோபமே

8. போலிக் கௌரவம் பெருந்தீங்கு தந்திடும்
பொறாமை நோய்க்கு மருந்தும் இல்லை
பொறாமை நீங்கிட அன்பே மருந்து
பொறுமையும் சேவையும் பெருந்தவமாகும் — கோபமே

9. ஆழியின் ஆழத்தில் முத்தும் விளையும்
ஆழ்ந்த அமைதியில் ஆன்மா ஒளிரும்
உள்மனம் அமைதியில் ஒடுங்கி நின்றால்
பாழ்மனம் ஒய்ந்து பரவெளி யாவோம் — கோபமே

10. அமைதியின் எதிரி கோபமு மாகும்
அன்பின் நண்பன் பொறுமையு மாகும்
ஆன்றோர் புகன்ற அறவழி ஆகும்
அன்பினில் இறைவனைக் காண்போம் கணமும் — கோபமே

11. அன்பின் விளைவு அருட்பெருஞ் ஜோதி
அன்பின் நிறைவு தனிப்பெருங் கருணை
அன்பில்லா நெஞ்சம் உயிருக்கு நஞ்சாம்
அன்பின் துணையே ஆனந்த மாகும் — கோபமே



ஓம் தத் சத்

# அனுபவ ஞானமே முக்திக்கு வழி

அனுபவ ஞானமே முக்தி தரும் – நாம்
ஆழ்ந்த அமைதியில் மூழ்கிடுவோம் – அனுபவ

1. தத்துவம் கேட்டு முடித்தாலும் – நாம்
தத்துவ நிலையில் உயர்வோமா?
மெத்தனமாக இருந்துவிட்டால் – நாம்
வஸ்துவில் ஒன்றிட முடிந்திடுமா? – அனுபவ

2. ஓங்கார ஒலியைக் கேட்டிடுவோம் – நாம்
உள்ளே அமைதி காத்திடுவோம்
ஓங்கார ஒலியில் ஒன்றிவிட்டால் – நாம்
ரீங்கார ஒலியுடன் நாமாவோம். – அனுபவ

3. அமைதியும் பொறுமையும் ஒன்றானால் – நாம்
ஆனந்தப் பரவசம் அடைந்திடலாம்
ஆன்ம ஒளியில் லயித்திடுவோம் – நாம்
அன்பின் ஒலியில் லயமாவோம். – அனுபவ

4. கோபம் லோபத்திற் கிடமில்லை – அங்கே
குரோதம் மோஹம் மறைந்துவிடும்
பாபச் செயலுக் கிடமில்லை – ஆன்ம
தீபஒளி மட்டும் காட்சி தரும். – அனுபவ

5. தவமும் ஞானமும் ஒன்றானால் – நாம்
தவத்தில் ஆழ்ந்து நாமாவோம்
பவவினை போக்கிடத் தவம்புரிவோம் – நாம்
பயமின்றி வாழ்ந்து பரமாவோம். – அனுபவ

6. மனமும் உள்ளே லயமானால் – உள்
மனமும் பொன்னாய் ஆகிவிடும்
பொன்னொளி வீசி அறிவானால் – நாம்
தன்னிலை பெற்று நாமாவோம் – அனுபவ

7. உள்ளம் அன்பால் நிறைந்துவிட்டால் – நாம்
உள்ளொளி தன்னில் நாமாவோம்
உள்ளும் புறமும் ஈஸ்வரனாம் – நம்
கள்ளம் போக்கி நமை யுணர்வோம் – அனுபவ

8. அன்பற்ற உள்ளம் பாலைவனம் – என்றும்
அன்புள்ள மனமே சோலைவனம்
அன்பில்லா நெஞ்சம் கல்நெஞ்சம்
அன்பின் நெஞ்சம் இறை தஞ்சம் – அனுபவ

9. தமோகுணம் மேல்ஓங்கி விட்டால் – அங்கே
தன்னை உணர்ந்திட தடையாகும்
சத்வ குணத்தைத் தாண்டிவிட்டால் – நாம்
சமநிலை பெற்று நாமாவோம். – அனுபவ

10. ஆணவம் அகந்தை அதிகமானால் – உடன்
அமைதியும் தவமும் ஓடிவிடும்
அன்பும் ஈகையும் மிகுந்துவிட்டால் – அங்கே
ஆழ்ந்த தியானம் கூடிவிடும் – அனுபவ



ஓம் தத் சத்

# கிளிஞ்சல்-வெள்ளி தத்துவ விளக்கம்

உள்ளே உணர்வது மெய்ப் பொருளாம்
உள்ளும் புறமும் விளங்கிடுமாம் — உள்ளே

1. கிளிஞ்சலும் தூரத்தில் வெள்ளியைப் போல் – நல்
ஒளியுடன் கூடி மின்னிடுமே
தூரத்துப் பார்வையில் ஒளிவீசும் – ஆனால்
அருகில் சென்றால் ஒளி இல்லை — உள்ளே

2. மாயா உலகம் கிளிஞ்சல் போல் – எதையும்
மயக்கித் தன்வசம் கவர்ந்திடுமே
மயக்கம் மோஹம் ஆசை மூன்றில் – நாம்
மயங்கி உழன்று மாய வேண்டாம். — உள்ளே

3. **கயிற்றில் சர்ப்பம் தோன்றிடுமே - வெறுங்**
**கானலும் நீர்போல் ஓடிடுமே**
**கட்டையில் கள்வன் தோன்றிடுவான் - உடன்**
**கிட்டவே சென்றால் மறைந்திடுவான் - உள்ளே**

4. உள்நோக்குச் சாதனை ஒளிதருமே – நாம்
உள்ளத்தில் ஆன்மாவை உணர்வோமே
நேதி நேதி தத்துவம் களைந்து – நாம்
நித்திய சுகத்தில் களித்திடுவோம் — உள்ளே

5. காமக் குரோத அசுரனை வென்றால் – இங்கு
எமபயம் ஒருகாலும் நமக்கில்லை
காலனை வென்றிட தவமும் இயற்றி – நாம்
காலத்தில் உணர்வோம் பேறறிவை – உள்ளே

6. பாசம் பற்று மாயை வசம் – நல்ல
நேசத்தின் எதிரி பாசவலை
பாசம் போக்கி நேசம் கொண்டால் – நாம்
பாசம் அகன்று நாமா வோம் – உள்ளே

7. கயிறு கானல் கட்டை மூன்றும் – மூல
காரணப் பொருளாம் சத்தியமாம்
சர்ப்பம் நீரும் கள்வன் போல – வெறுங்
காட்சி மாத்திரம் அசத்தியமாம் – உள்ளே

8. உண்மைப் பொருளான ஆன்மாவை – நாம்
உள்ளத்தில் ஒளிர்வதை உணர்வோமே
அனான்மப் பொருளான வையத்தை – நாம்
மனதில் பற்றாது உய்வோமே. – உள்ளே

✯✯✯✯



ஓம் தத் சத்

## யார் அஞ்ஞானி ?

மெட்டு : நந்தவனத்தில் ஓர் ஆண்டி

அஞ்ஞானி யார் என்று கேட்பீர் – நாம்
அஞ்ஞானம் போக்கி குருவருள் பெறுவோம் – அஞ்ஞானி

1. உடலைத் தானென்று நினைப்பார் – தம்
உடமையில் கண்ணுங் கருத்தாய் இருப்பார்
உடல்தனைப் பேணுவார் என்றும் – அவர்
மடமையில் ஊன்றி ஆழ்ந்திடுவாரே – அஞ்ஞானி

2. எல்லாம் தனதென்று நினைப்பார் – அவர்
நல்லதை மறந்து அல்லவை செய்வார்
உலகியல் பற்றும் கொள்வார் – அவர்
நிலையில்லாப் பொருளை விருப்புடன் கொள்வார் – அஞ்ஞானி

3. பொன்பொருள் சேர்ப்பதில் கழிப்பார் – தன்
பொன்போன்ற நேரத்தின் மகிமை அறியார்
பாசத்தின் உறைவிடம் ஆவார் – அவர்
மாசுள்ள மனத்தால் துன்பமும் பெறுவார் – அஞ்ஞானி

4. சான்றோரின் உறவை விரும்பார் – அவர்
சத்சங்கத் தொடர்பில் நாட்டமும் கொள்ளார்
உற்றாரைச் சதமென்று நினைப்பார் – அவர்
கற்றவை சுகத்தைத் தருவது மில்லை – அஞ்ஞானி

5. மனம் போன போக்கிலே செல்வார் – அவரது
மனமும் காற்றாய்அலைந்தே திரியும்
நித்திய மநித்தியம் தெளியார் – அவர்
அநித்திய வாழ்வில் மூழ்கியும் இருப்பார் – அஞ்ஞானி

6. அழியும் சுகத்தில் களிப்பார் – அவர்
ஆன்ம சுகத்தை முற்றிலும் அறியார்
அன்பின் பெருமை அறியார் – அவர்
இன்னலை என்றும் பெற்று அழிவார் – அஞ்ஞானி

7. பதவியும் பட்டமும் பெறுவார் – அவர்
உதவியை யாருக்கும் என்றும் செய்யார்
தவறை என்றும் உணரார் – அவர்
தவறாமல் தன்னை அழித்துக் கொள்வார் – அஞ்ஞானி

8. குருவின் பெருமை அறியார் – அவர்
பிறவி நோய் ஒழிக்க வழியும் தெரியார்
பலகோடி ஜன்மம் எடுப்பார் – அவரது
பிறப்பால் நன்மை யாருக்கு மில்லை – அஞ்ஞானி

9. பஞ்ச பாதகம் செய்வார் – அவர்
பாழும் நரகில் நிச்சயம் வீழ்வார்
எமனிடம் தப்புவம் மாட்டார் – அவர்
எமலோகம் சென்று புழுவாய் துடிப்பார் – அஞ்ஞானி

10. தீயோரைப் புகலிடம் அடைவார் – அவர்
தூய்மையின் பெருமை அறியவு மாட்டார்
நற்செயல் புரியவும் மாட்டார் – அவர்
நற்கதி அடையும் வழியும் அறியார் – அஞ்ஞானி

11. வாழ்வின் புனிதம் அறியார் – அவர்
வஞ்சனை பலவும் செய்து மகிழ்வார்
ஆணவம் ஆசையில் வாழ்வார் – அவர்
பணமே குறியென வாழ்ந்திடு வாரே. – அஞ்ஞானி

12. குருவைச் சரணம் அடைந்தால் – அவர்
திருவருள் பெற்று முக்தியும் அடைவார்
பிறவியின் பெருமையும் அறிவார் – அவர்
பெருவாழ்வு பெற்று மோட்சம் பெறுவார் – அஞ்ஞானி

– திருச்சிற்றம்பலம் –



ஓம் தத்சத்

# சித்தர்கள் அருளிய திவ்ய ஞானம்

## ஓங்கார நாதம் – ராகம் : சுபபந்துவராளி

1. ஊழ்வினை போக்கிடும் விநாயகப் பெருமானே!
ஊழ்வினை போக்குவது எக்காலம்?
பல்கலை கற்றும் தொல்வினை அகன்று
பாபம் களைவது எக்காலம்?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

2. கணம் கணம் வாடி வதைந்து வாழாமல்
தினம் தினம் உய்வது எக்காலம்?
கணநாதன் பாதம் பற்றி வாழ்ந்திட
அனுதினம் நினைப்பது எக்காலம் ?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

3. உண்மை நிலையை உள்ளே உணர்ந்து
உய்வு பெறுவது எக்காலம்?
உள்ளதை நன்றாய் உணர்ந்து கொண்டு
வாழ்நாளைக் கழிப்பது எக்காலம்?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

4. உள்ளத்தில் ஆன்மாவை உணர்ந்து நானும்
களித்து வாழ்வது எக்காலம்?
உணர்வில் நிலைத்து உவகை பெற்று
உயர்ந்து வாழ்வது எக்காலம்?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

5. கள்ளம் போக்கிக் கபடம் அகற்றிக்
காமத்தை அழிப்பது எக்காலம்?
உள்ளம் அன்பால் நிரம்பி வாழ்ந்து
இறைவனைக் காண்பது எக்காலம்?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

6. கயமைத் தனத்தை அறவே நீக்கிக்
காலனை வெல்வது எக்காலம் ?
உவமை இல்லா ஈசன் பாதம்
பற்றி வாழ்வது எக்காலம் ?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

7. காலத்தின் அருமை உணர்ந்து வாழ்ந்து
கடைவழி காண்பது எக்காலம் ?
உலகின் இயல்பை நன்றாய் உணர்ந்து
உயர்வு பெறுவது எக்காலம் ?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

8. மனமாசு போக்கி மாயை களைந்து
மறைபொருள் உணர்வது எக்காலம் ?
இனமத பேதம் களைந்து வாழ்ந்து
இன்னல் களைவது எக்காலம் ?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

9. அஞ்ஞானம் போக்கி அகவிருள் அகன்று
ஞானம் பெறுவது எக்காலம் ?
ஆன்ம நேயம் எனக்குள் வந்து
ஆனந்தம் பெறுவது எக்காலம் ?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

10. உறவும் அற்று பற்றும் அகன்று
உண்மை தெளிவது எக்காலம் ?
ஊமைபோல் வாழ்ந்து அறிவும் துலங்கி
உள்ளதை உணர்வது எக்காலம் ?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்



11. பொய்யும் புரட்டும் வாழ்வில் நீங்கி
மெய்யை உணர்வது எக்காலம்?
பேய்போல் திரிந்து அலைந்து வாழும்
பாழ்மனம் மாய்வது எக்காலம்?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

12. பொய்யுடல் பற்று நீங்கி வாழ்ந்து
மெய்ப்பொருள் காண்பது எக்காலம்?
மெய்ப்பொருள் நானே என்பதை உணர்ந்து
மெய்யனைக் காண்பது எக்காலம்?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

13. மனதை அடக்கி மாயை களைந்து
மனதை ஆள்வது எக்காலம்?
மனமாசு போக்கி இன்பம் துய்த்து
இன்னல் களைவது எக்காலம்?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

14. பொன்பொருள் ஆசை அறவே நீக்கித்
தன்னிலை ஆவது எக்காலம்?
தன்போல் பிறரை மதித்து வாழும்
தன்மை பெறுவது எக்காலம்?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

15. கானல்நீர் வாழ்க்கையில் பற்றற்று வாழ்ந்து
ஞானம் பெறுவது எக்காலம்?
கண்போனபோக்கில் மாண்டு போகாமல்
விண்போல் ஆவது எக்காலம்?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

16. மோகம் சோகத்தில் தோய்ந்து விடாமல்
முக்தி பெறுவது எக்காலம் ?
வேதனை சோதனை தாக்கிவிடாமல்
போதம் பெறுவது எக்காலம் ?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

17. புத்தி தெளிந்து குருவை அடைந்து
போதனை கேட்பது எக்காலம் ?
பற்றற்று வாழ்ந்து பகவானை நினைந்து
பாசம் அறுப்பது எக்காலம் ?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

18. பஞ்சகோசந் தாண்டி பாழ்மனம் ஓய்ந்து
பரபோதம் பெறுவது எக்காலம் ?
தஞ்சம் அடைந்து இறைவனைப் பற்றித்
தாள்பற்றி நிற்பது எக்காலம் ?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

19. ஊனக்கண் போக்கில் உழன்று வாழாமல்
ஞானம் பெறுவது எக்காலம் ?
ஞானத்தைப் பற்றி நலிந்து வாடாமல்
ஞானத்தில் திளைப்பது எக்காலம் ?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

20. பிறவிநோய் போக்கிடச் சத்சங்கம் சார்ந்து
பேரின்பம் பெறுவது எக்காலம் ?
பற்றை யொழித்துப் பரபோதம் பெற்றிடப்
பாசம் அறுப்பது எக்காலம் ?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்



21. கண்டத்தில் வாழ்ந்து ஞானக்கண் பெற்று
அகண்டம் ஆவது எக்காலம்?
கண்டத்தில் வாழ்ந்து சோகம் நீங்கி
அகண்டனை அடைவது எக்காலம்?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

22. ஊழ்வினை போக்கிப் பிறவி அறுத்திடப்
பாழ்மனம் ஓய்வது எக்காலம்?
பரபோதம் பெற்று ப்ரம்மம் ஆகிடப்
பரஞானம் பெறுவது எக்காலம்?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

23. பந்தமும் சொந்தமும் பிறவி தருமே
பந்தம் அறுப்பது எக்காலம்?
பந்தம் அறுத்து நற்கதி பெற்றிடச்
சொந்தம் அறுப்பது எக்காலம்?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

24. நால்வேத வாக்கியம் நன்றாய் உணர்ந்து
நற்பதம் பெறுவது எக்காலம்?
நல்லது தீயது நன்றாய் தெளிந்து
நன்னிலம் பெறுவது எக்காலம்?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

25. சற்குரு வாக்கியம் கேட்டு நடந்து
சாதனை செய்வது எக்காலம்?
சத்சங்கம் சார்ந்து வேதனை போக்கிச்
சாந்தமாய் இருப்பது எக்காலம்?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

26. சத்வ குணத்தில் கணமும் வாழ்ந்து
சாந்தி பெறுவது எக்காலம்?
சத்யம் தர்மம் நன்கு தழைத்துச்
சாயுச்சியம் பெறுவது எக்காலம்?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

27. உடல்பொருள் ஆவி தியாகம் செய்து
கடமை செய்வது எக்காலம்?
உடற்பற்று நீங்கி உண்மை தெளிந்து
உய்வு பெறுவது எக்காலம்?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

28. தண்ணொளி பெற்றுத் தன்னை உணர்ந்திட
தவத்தில் கழிப்பது எக்காலம்?
தன்னில் தானாய் நிலைத்து இருந்து
தன்னை அறிவது எக்காலம்?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

29. அன்பில் களித்து ஆனந்தம் பெற்றிட
ஆன்மாவில் லயிப்பது எக்காலம்?
அன்பும் சிவமும் ஒன்றென உணர்ந்து
தன்னிலை ஆவது எக்காலம்?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

30. பேதம் கடந்து பெருநிலை பெற்றுப்
போதம் பெறுவது எக்காலம்?
வேதனை அகன்று பற்றும் ஒழிந்திடச்
சாதனை செய்வது எக்காலம்?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

31. சிரவண மனன நிதித்யா சனம்
சிரத்தையாய் செய்வது எக்காலம்?
சிந்தையில் சிவனை நினைத்து இருந்து
சிவமாய் ஆவது எக்காலம்?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

32. விவேகம் பெற்று விருத்திகள் ஒடுங்கி
உள்ளே இருப்பது எக்காலம்?
உள்ளும் புறமும் ஒன்றென உணர்ந்து
உள்ளொளி பெறுவது எக்காலம்?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

33. வான்வெளி உள்வெளி ஒன்றென உணர்ந்து
உள்ளொளி காண்பது எக்காலம்?
ஆன்மா ப்ரம்மம் ஐக்கியம் ஆகிட
நுண்பொருள் காண்பது எக்காலம்?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

34. காலத்தின் அருமை பெருமை தெளிந்து
காலனை வெல்வது எக்காலம்?
கவலை நீங்கிக் கடவுளை நினைந்து
காலத்தைக் கழிப்பது எக்காலம்
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

35. உலக மாயையில் சிக்கி விடாமல்
தனித்து வாழ்வது எக்காலம்?
உண்மைப் பொருளை உள்ளே உணர்ந்து
ஒளியுடன் வாழ்வது எக்காலம்?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

36. கட்டையில் கள்வன் இல்லை என்று
திடமாய் இருப்பது எக்காலம்?
கட்டைக்கும் உடலுக்கும் இருப்பும் இல்லை
காரணம் அறிவது எக்காலம் ?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

**37. வெட்ட வெளியை உள்ளே கண்டு**
**வாட்டம் தெளிவது எக்காலம்?**
**நட்ட கல்லில் நாதனைக் கண்டு**
**பட்டயம் பெறுவது எக்காலம்?**
**ஓம் சிவ சிவ ஓம் - ஓம் ஹர ஹர ஓம்**

38. அணுவுக் கணுவாய் இருந்து இயக்கும்
ஈசனைக் காண்பது எக்காலம்?
காண்பவை யாவும் ஈசன் சொரூபம்
என்பதை அறிவது எக்காலம்?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

39. பொய்யும் மெய்யும் கலந்தது உலகம்
பொய்யைக் களைவது எக்காலம்?
வாய்மையே வெல்லும் என்பது உண்மை
வாய்மையில் கழிப்பது எக்காலம்?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

40. சித்தர்கள் சொன்ன வாக்குகள் வேதம்
சித்தம் தெளிவது எக்காலம்?
நித்தம் நித்தம் அத்தனை நினைந்து
அத்தனை அடைவது எக்காலம்?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

41. கனவில் பெற்ற செல்வம் அனைத்தும்
விழித்தால் போதும் ஓடிடுமே!
கனவு வாழ்க்கை தந்த இன்பம்
ஈசனை அடைய உதவுமா?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

42. ஆதி சங்கரர் சொன்ன தத்வம்
நம்முள் உணர்வது எக்காலம்?
அத்வைத தத்வ உண்மை தெளிந்து
ப்ரம்மம் ஆவது எக்காலம்?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

43. தக்ஷிணா மூர்த்தி அவதார சொரூபம்
ஆதி சங்கரர் தானே
தத்துவம் கேட்டு உணர்ந்து திடமாய்
முக்தி பெறுவது எக்காலம்?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

44. மும்முக்ஷீ சாதனை முயன்று முடித்து
நம்மை உணர்வது எக்காலம்?
முக்குணம் தாண்டி மும்மலம் அறுத்து
மோட்சம் பெறுவது எக்காலம்?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

45. ஞானியர் புகன்ற நால்வேத வாக்யம்
நன்கு உணர்வது எக்காலம்?
ஞானக் கண்ணும் நமக்குள் தோன்றி
ஞானம் பெறுவது எக்காலம்?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்



46. பேதமை போக்கிப் பேராண்மை வந்து
பேரின்பம் பெறுவது எக்காலம்?
வாதம் புரிவதைத் தவிர்த்து நாளும்
போதத்தில் கழிப்பது எக்காலம்?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

47. காரண காரியம் அறிந்து மனமும்
செம்மை ஆவது எக்காலம்?
கரணங்கள் ஒடுங்கி தன்னை அறிந்து
பரபோதம் பெறுவது எக்காலம்?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

48. தோன்றி ஒடுங்கும் தத்வம் தன்னை
நாமும் உணர்வது எக்காலம்?
மன்றுள்ளாடும் மாமணி தன்னை
நம்முள் உணர்வது எக்காலம்?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

49. நடமும் ஆட்டமும் சிவனின் லீலையை
நமக்குள் காண்பது எக்காலம்?
நம்மை உணர்ந்து ஈசனைக் கண்டு
களித்து உய்வது எக்காலம்?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

50. வேதாந்த சாரம் குருவுப தேசம்
நன்கு தெளிவது எக்காலம்?
வித்தும் நாமே விளைவும் நாமே!
வித்தில் ஒடுங்குவது எக்காலம்?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

51. சீவனும் சிவனும் இணைந்து இருப்பதை
சித்தத்தில் காண்பது எக்காலம்?
சீவனும் சிவமாய் ஒளிர்ந்து மிளிர்ந்து
சிவமாய் ஆவது எக்காலம்?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

52. மண்ணுடல் உள்ளே நம்மை இயக்கிடும்
மறைபொருள் காண்பது எக்காலம்?
விண்ணுக்கும் மண்ணுக்கும் ஆதாரம் ஒன்றே
ஆதார மாவது எக்காலம்?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

53. தோன்றும் யாவும் மறையும் ஒருநாள்
இவ்வுண்மை தெளிவது எக்காலம்?
தரணி வாழ்க்கை முற்றுப் பெற்றுத்
தன்னிலை ஆவது எக்காலம்?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

54. அழுது அழுது வாழ்ந்ததும் போதும்
அழுகை நிற்பது எக்காலம்?
உழுது உழுது வாழ்ந்தது போதும்
பழுதின்றி வாழ்வது எக்காலம்?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

55. காயத்தைக் காத்திடும் அன்பர் சகாயா!
மாயை அகல்வது எக்காலம்?
மாயா உலகம் நம்மை மாய்த்திடும்
மர்மம் புரிவது எக்காலம்?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

56. ஊழ்வினை மாய்ந்து உள்ளொளி பெற்று
உய்வு பெறுவது எக்காலம் ?
விழலுக் கிறைத்து வீணாய்க் கழிக்காமல்
வாழ்ந்து மறைவது எக்காலம் ?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

57. கோடிப் பிறவி எடுத்து வாழாமல்
பொன்னடி சேர்வது எக்காலம் ?
கோடிப் புண்ணியம் சேர்த்து வாழாமல்
திருவடி அடைவது எக்காலம் ?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

58. வாடிய பயிர்போல் வாழ்ந்தது போதும்
வாட்டம் போவது எக்காலம் ?
முதலும் முடிவும் இல்லா இறைவன்
திருவடி அடைவது எக்காலம் ?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

59. எனதென எண்ணும் எண்ணத்தை நானும்
உனதென்று கூறுவ தெக்காலம் ?
நானெனதென்ற எண்ணம் விடுத்து
என்னில் கலப்பது எக்காலம் ?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

60. தேகமே நானென எண்ணி வாழாமல்
தேகியை உணர்வது எக்காலம் ?
அகமே நானென எண்ணி வாழ்ந்து
அகத்தை நாடுவது எக்காலம் ?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

61. புறவாழ்வில் ஆனந்தம் காண்பது பேதமை
அகத்தை உணர்வது எக்காலம் ?
பறவைபோல் பறந்து வாழ்ந்து மடியாமல்
பரத்தில் கலப்பது எக்காலம் ?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

62. தாய்மை காட்டும் தலைவனை நினைந்து
தூய்மை பெறுவது எக்காலம் ?
தூய்மையே இறைவன் குணமும் ஆகும்
தூய்மை ஆவது எக்காலம் ?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

63. மௌனம் என்பது பெருந் தவமாகும்
மௌனத்தில் ஆழ்வது எக்காலம் ?
மௌனம் மோனம் தவத்தின் முடிவே
மோனத்தில் கழிப்பது எக்காலம் ?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

64. சூரியன் இன்றி நிலவுக்கு ஒளிஇல்லை
உள்ளொளி இன்றி நாமுமில்லை
ஆன்ம நிலவு நமக்குள் தோன்றி
ஒளியைத் காண்பது எக்காலம் ?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

65. நற்தவம் புரிந்து நாதன் ஆடிடும்
பொற்சபை காண்பது எக்காலம் ?
பொன்போல் ஒளிரும் சபேசன் பாதம்
கண்டு களிப்பது எக்காலம் ?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

66. சிதம்பர நாதனை சித்தத்தில் கண்டு
சித்தம் தெளிவது எக்காலம்?
வித்தென்ற ஆன்மாவை உள்ளே கண்டு
உவகை அடைவது எக்காலம்?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

67. தத்துவ விசாரம் குருவிடம் கேட்டு
தானாய் இருப்பது எக்காலம்?
தானும் சிவனும் ஒன்றென உணர்ந்திடத்
தவத்தில் கழிப்பது எக்காலம்?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

68. மத்தள வயிரனை உள்ளத்தில் உணர்ந்திட
மார்க்கம் பெறுவது எக்காலம்?
உத்தமர் உறவில் கலந்துரை யாடி
உண்மை தெளிவது எக்காலம்?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

69. சத்திலே தோன்றி ஒடுங்கும் தத்வம்
தானென உணர்வது எக்காலம்?
சச்சிதா னந்தம் நாமே என்பதை
நன்கு தெளிவது எக்காலம்?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

70. குணம்மணம் இல்லா நிறைபொருள் ஆன்மா
இருப்பிடம் காண்பது எக்காலம்?
குவலய வாழ்க்கை இருமை தந்திடும்
இருமை கடப்பது எக்காலம்?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

71. உத்தமி புதல்வன் ஓங்கார நாதனை
உள்ளத்தில் காண்பது எக்காலம்?
உருவம் கண்டு மதி மயங்காமல்
இருப்பை உணர்வது எக்காலம்?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

72. ஆழ்ந்த அமைதியில் தியானம் செய்து
அனுபூதி பெறுவது எக்காலம்?
ஆக்ஞா சக்கர ஒளியில் லயித்து
ஆனந்தம் பெறுவது எக்காலம்?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

73. சகஸ்ர தளத்தில் உணர்வு பெற்றுச்
சாந்தி பெறுவது எக்காலம்?
சலனம் இன்றி மனமும் ஒடுங்கிச்
சாந்தத்தில் நிலைப்பது எக்காலம்?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

74. மூலக் கனலை முறையாய் எழுப்பி
முழுமை பெறுவது எக்காலம்?
காலத்தை வென்றிட கடுந்தவம் புரிந்து
ப்ரம்மம் ஆவது எக்காலம்?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

75. மனோதவம் பெற்று மனமும் அடங்கி
மன்றத்தில் நிலைப்பது எக்காலம்?
கனவுபோல் உலகை நினைத்து வாழ்ந்து
பற்றை அறுப்பது எக்காலம்?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்



76. சுழிமுனைக் காட்சியில் ஆழ்ந்து லயித்து
ஆனந்தம் அடைவது எக்காலம் ?
ஊழ்வினை வேறுடன் முற்றும் களைந்து
பூரண விடுதலை எக்காலம் ?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

77. மோகம் களைந்து வேகம் தணிந்து
அகக்கண் தரிசனம் எக்காலம் ?
அகமும் குளிர்ந்து ஆசையும் ஒழிந்து
ஆனந்தம் பெறுவது எக்காலம் ?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

78. அஹம் ப்ரம்மாஸ்மி தத்வம் உணர்ந்து
ஆன்மாவில் லயிப்பது எக்காலம் ?
ஆலய தத்வம் நம்முள் இருப்பதை
ஆய்ந்து தெளிவது எக்காலம் ?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

79. கனவும் நனவும் கற்பித மாகும்
கனவு உலகம் பொய்யாகும்
காண்பவை யாவும் ப்ரம்ம சொரூபம்
அப்பொருள் ஆவது எக்காலம் ?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

80. விழிகள் மூடி இருந்த பொழுதும்
சுழிமுனை காண்பது எக்காலம் ?
விழிப்பு நிலையிலும் ஆனந்தம் பெற்றுக்
களிப்புடன் இருப்பது எக்காலம் ?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்



81. சிவலிங்க ஜோதியும் சித்தத்தில் ஒளிவீசி
சிவலிங்கம் ஆவது எக்காலம்?
சின்மய தத்துவம் சிரசில் உணர்ந்து
சிவமயம் ஆவது எக்காலம்?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

82. சிவமும் சுந்தரம் நமசிவாய மந்திரம்
சிவத்தில் கலப்பது எக்காலம்?
சுயஒளி சிவஒளி நாமே ஆகி
தண்ணொளி பெறுவது எக்காலம்?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

83. பரமனை நினைந்து உள்ளொளி பெற்றுப்
பிறைஒளி காண்பது எக்காலம்?
பார்வதி நேசனை பாம்பணி அரனை
ப்ரம்மமாய் காண்பது எக்காலம்?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

84. மிடுக்குடன் உடுக்கை ஒலியை எழுப்பிடும்
நாதம் கேட்பது எக்காலம்?
ஈசனின் தத்துவம் தனை உணர்ந்து
ஈண்டு உய்வது எக்காலம்?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

85. சடைமுடி தரித்துப் பிறையும் சூடிடும்
சதாசிவன் காண்பது எக்காலம்?
சதாகாலம் நினைந்து நினைந்து வாழ்ந்து
சமாதி அடைவது எக்காலம்?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

86. கங்கையைச் சிரத்தில் தாங்கி இருக்கும்
சதாசிவன் தரிசனம் எப்போது ?
இங்கும் அங்கும் அலையும் மனத்தை
சிவன்பால் வைப்பது எக்காலம் ?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

87. இமயத்தில் தவம் இயற்றும் ஈசனைப்
பற்றி உய்வது எக்காலம் ?
உமயவள் அருள்பெற்று வாழ்ந்து ஈண்டு
உய்வு அடைவது எக்காலம் ?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

88. குன்றுதோறு மாடும் கந்தன் பாதம்
அடையப் பெறுவது எக்காலம் ?
என்றும் இனிதே ஞானம் பெற்று
நன்றாய் வாழ்வது எக்காலம் ?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

89. தந்தைக்கு உபதேசம் செய்த முருகன்
ஞானம் தருவது எக்காலம் ?
அந்தமும் ஆதியும் இல்லா ஈசன்
அடைக்கலம் தருவது எக்காலம் ?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

90. எமனைக் காலால் உதைத்த ஈசன்
திருவடி அடைவது எக்காலம் ?
காமனை எரித்த கயிலை நாதன்
அருளைப் பெறுவது எக்காலம் ?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

91. பிள்ளைக் கறிகேட்ட பித்தன் பாதம்
உள்ளத்தில் பதிப்பது எக்காலம்?
உள்ளமும் கோவிலாய் மாறி என்னுள்
உறைந்து இருப்பது எக்காலம்?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

92. திரிகாலம் உணர்ந்த திருசூல நாதன்
திருவருள் பெறுவது எக்காலம்?
என்னைக் கருவிலே ஆட்கொண்ட பெருமான்
பாதம் பற்றுவ தெக்காலம்?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

93. ஸ்ருஷ்டி திதி லயம் ஆன பொருளே
திருவடி அடைவது எக்காலம் ?
திரிபுடி அற்ற நிலையில் ஒன்றி
ப்ரம்மம் ஆவது எக்காலம்?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

94. வேத சொரூபன் வேதாந்த நாதன்
போதம் பெறுவது எக்காலம்?
நாதத்தின் ஜோதியே போதாந்த ஜோதியே
நாதத்தில் கலப்பது எக்காலம்?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

95. பிறவிநோய் அகன்று பேரின்பம் பெற்றிடப்
பரத்தில் கலப்பது எக்காலம்?
அரனின் திருவடி பற்றி என்றும்
ஆனந்தம் பெறுவது எக்காலம்?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

96. கருமேகத் திற்கிடையில் பளிச்சிடும் ஜோதி
தரிசனம் காண்பது எக்காலம் ?
மின்னல்போல் ஒளிவீசிக் களிப்பை யூட்டி
ஆனந்தம் பெறுவது எக்காலம் ?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

97. குமரி முனையில் காலையில் உதிக்கும்
கதிரவன் போலே ஒளிவீசிக்
காட்சிதரும் அழகுபோல்எனக் கென்றும்
ஆனந்தம் தருவது எக்காலம் ?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

98. உவமை இலாத அழகும் ஒளியாகி
பரவசம் ஆவது எக்காலம் ?
பரவெளி தரிசனம் பாப நாசனம்
பவவினை களைவது எக்காலம் ?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

99. சித்தர்கள் அருளிய திவ்ய ஞானம்
எனக்குக் கிடைப்பது எக்காலம் ?
புத்தம் புதிய மாறாத சத்யம்
உணர்ந்து உய்வது எக்காலம் ?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

100. கணநாதன் பாதம் அனுதினம் தொழுது
காயத்தைக் கடப்பது எக்காலம் ?
முக்கண்ணன் பாதம் முறையாய் பற்றி
முழுமை பெறுவது எக்காலம் ?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

101. முழுமுதற் பொருளை அகத்தில் கண்டு
ஆனந்தம் அடைவது எக்காலம் ?
காயத்தைப் பொய்யென்று எண்ணி வாழ்ந்து
உய்வு பெறுவது எக்காலம்
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

102. உடமை நமதல்ல எனஎண்ணி வாழ்ந்து
உடையவன் ஆவது எக்காலம்?
ஆணவம் செறுக்கு மமதை அகன்று
நற்குணம் பெறுவது எக்காலம்?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

103. கோவில் குளம் சென்று அலையாமல்
உளக்கோவில் காண்பது எக்காலம்?
பூஜைகள் பலசெய்து வாழ்நாளைக் கழிக்காமல்
உட்பூஜை செய்வது எக்காலம்?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

104. வீண்பேச்சுப் பேசி நாளைக் கழிக்காமல்
தியானத்தில் கழிப்பது எக்காலம்?
ஈவு இரக்கம் அன்பில் கழித்து
இறைவனைக் காண்பது எக்காலம்?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

105. பசித்தோர் பசிபோக்கி இரக்கம் காட்டி
பகவானை அடைவது எக்காலம்?
நலிந்தோர் மெலிந்தோர் வாட்டம் போக்கி
நாதனை அடைவது எக்காலம்?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

106. அறநூல் பலகற்று ஆன்மிகத்தில் திளைத்து
ஈசனை அடைவது எக்காலம்?
அறம்பல செய்து பண்பை வளர்த்து
இறைவனைக் காண்பது எக்காலம்?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

107. ஜீவ ஒழுக்கம் சீலமாய்ப் பற்றிச்
சிவமாய் ஆவது எக்காலம்?
வீண்பொழுது போக்காமல் இறைநாமம் சொல்லி
ஈசன்பதம் பெறுவது எக்காலம்?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

108. எல்லோரும் ஓர்குலம் எனஎண்ணி வாழ்ந்து
இறைவனைக் காண்பது எக்காலம்?
அனைத்தும் அவனே எனஎண்ணி வாழ்ந்து
ஈசனைக் காண்பது எக்காலம்?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

109. பிறவிநோய் ஒழித்திட பற்றை அறுத்து
ப்ரம்மம் ஆவது எக்காலம்?
உயிரின் அருமை தெரிந்து உணர்ந்து
உய்வு பெறுவது எக்காலம்?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

110. பிறவியின் காரணம் நன்கு தெளிந்து
பிறப்பை அறுப்பது எக்காலம்?
முற்பிறவி வாசனை அறவே ஒழித்து
முக்தி பெறுவது எக்காலம்?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

111. தாயின் கருவில் இனியும் வளராமல்
தலைவனைச் சேர்வது எக்காலம்?
கருவிலே முளைத்த பிறவி வாசனை
அறவே ஒழிப்பது எக்காலம்?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

112. பருஉடல் இயக்கி காரியம் ஆற்றிடும்
பரமனைக் காண்பது எக்காலம் ?
பாசம் பற்றில் ஆழ்ந்து போகாமல்
பாசத்தை அறுப்பது எக்காலம்?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

113. நீசரின் தொடர்பை அறவே நீக்கி
ஈசனை அடைவது எக்காலம்?
கருப்பொருள் ஆன்மாவை உள்ளே கண்டு
களித்து இருப்பது எக்காலம்?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

114. மறுமைக்கு வித்திடும் மார்க்கம் தவிர்த்து
இருமை களைவது எக்காலம்?
குலத்தைப் போற்றாமல் உடல்பற்று நீங்கி
மலதோசம் அறுப்பது எக்காலம்?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

115. தாழ்குலம் உயர்குலம் பாராது வாழ்ந்து
அத்தனைப் பற்றுவது எக்காலம்?
அத்தனின் அருள்பெற்று நாளும் களிப்புற
எத்தனம் செய்வது எக்காலம்?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

116. பஞ்சகோச உடலை இயக்கும் ஆன்மாவை
உணர்ந்து உய்வது எக்காலம் ?
நஞ்சான விசயத்தை நாடாமல் வாழ்ந்து
நஞ்சுண்டான் ஆவது எக்காலம் ?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

117. நமக்குள் சாட்சியாய் இருந்து இயக்கும்
ஆன்மாவை உணர்வது எக்காலம் ?
வீடும் நாடும் நமதல்ல எனஎண்ணி
வீடுபேறு அடைவது எக்காலம் ?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

118. சுற்றமும் உற்றாரும் நிலையல்ல எனஎண்ணி
பொற்பதம் பெறுவது எக்காலம் ?
ஈசனின் வாசம் அனைத்திலும் உள்ளது
ஈசனை அடைவது எக்காலம் ?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

119. மண்பெண் பொன்னாசை அறவே அகன்று
பொற்சபை காண்பது எக்காலம் ?
விண்ணுக்கும் மண்ணுக்கும் சாட்சியாய் விளங்கும்
அகண்டம் ஆவது எக்காலம் ?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

120. கண்களால் காணும் மாயா உலகம்
பற்றாமல் இருப்பது எக்காலம் ?
விண்ணோர் பிறவிக்கு ஆசைப் படாமல்
பிறவி அறுப்பது எக்காலம் ?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

121. சிற்றின்பம் தந்திடும் ஆசைகள் நீக்கி
பேரின்பம் பெறுவது எக்காலம்?
சித்தர்கள் கூறும் ஞானநூல் கேட்டு
ஞானம் பெறுவது எக்காலம்?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

122. சித்தம் தெளிந்து ஞானத்தைப் பெற்று
சிவமயம் ஆவது எக்காலம்?
சிற்சபை பொற்சபை உள்ளே கண்டு
சின்மயம் ஆவது எக்காலம்?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

123. கருமம் பக்தி கிரியை கடந்து
விருத்திகள் ஒடுங்குவது எக்காலம்?
இறைவனைத் தேடி ஓடி அலைந்து
இறைவன் ஆவது எக்காலம்?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

124. மறைபொருள் தன்னை உள்ளே உணர்ந்து
மன்றத்தில் கலப்பது எக்காலம்?
**ரமணர்** உணர்ந்த அத்வைத உண்மை
உள்ளே காண்பது எக்காலம்?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

125. வள்ளலார் கண்ட ஜோதி சொரூபம்
நாமே ஆவது எக்காலம்?
அருண கிரிநாதர் கண்ட அனுபவம்
நாமும் பெறுவது எக்காலம்?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

126. பத்ர கிரியார் சொன்ன உபதேசம்
நாமும் பற்றுவ தெக்காலம் ?
உள்ளமும் ஞானத்தால் நிரம்பித் ததும்பி
உய்வு பெறுவது எக்காலம் ?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

127. மனமும் தெளிந்து மாசும் பொசுங்கி
ஞானம் பெறுவது எக்காலம் ?
காரண சரீரம் கடந்து உள்ளே
சாட்சியாய் இருப்பது எக்காலம் ?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

128. ஆன்மாவே சாட்சியாய் இருப்பது என்பதை
ஆழ்ந்து காண்பது எக்காலம் ?
போகத்தில் ஆழ்ந்து மாண்டு போகாமல்
யோகத்தில் திளைப்பது எக்காலம் ?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

129. ஆதி நாயகன் பதமும் பற்றி
ஜோதி ஆவது எக்காலம் ?
ஆதி அந்தம் இல்லா ஈசன்
அருளைப் பெறுவது எக்காலம் ?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

130. ஓம் என்னும் பிரணவ சொரூபமும் ஆகி
ஒடுக்கம் பெறுவது எக்காலம் ?
நான்என்ற ஆணவம் அழிந்து நானும்
நாதத்தில் கலப்பது எக்காலம் ?
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்

131. வேதமும் நீயே ! நாதமும் நீயே
வித்தும் நீயே ! ஜோதியும் நீயே !
ஆதாரம் நீயே ! அருளும் நீயே !
குருவும் நீயே ! திருவும் நீயே !
ஓம் சிவ சிவ ஓம் – ஓம் ஹர ஹர ஓம்



– திருச்சிற்றம்பலம் –








ஓம் தத் சத்
அருள்மிகு வடகாசி அம்மன் துணை



# தங்கக் கொடிமர சிறப்புப் பாடல்

1. கொடிமரமாம் கொடி மரம்
தங்க நிறக் கொடிமரம்
வடகாசி அம்மன் தந்த
உயர்ந்த பெருங் கொடிமரம் (கொடி)

2. ஊரும் நாடும் செழித்திட
உயர்வான கொடிமரம்
வளமெல்லாம் தந்திடும்
வான்சிறப்புக் கொடிமரம் (கொடி)

3. தெய்வ நெறி மலர்ந்திட
தேவலோகக் கொடிமரம்
தேவர் மூவர் வணங்கிடும்
திருத்தலத்தின் கொடிமரம் (கொடி)

4. இலட்சி யத்தை முடித்திடும்
நன்மை யாவும் நல்கிடும்
இறைவன் தந்த கொடிமரம்
நம்மைக் காக்கும் கொடிமரம் (கொடி)

5. அகங்கா ரத்தை அழித்திடும்
அழகான கொடிமரம்
இருள் போக்கும் கொடிமரம்
ஞானம் தரும் கொடிமரம் (கொடி)

6. கொடி மரத்தை வணங்கிட
கோடிப் புண்யம் வந்திடும்
கொடிய பாபம் தொலைந்திடும்
கோடி நன்மை கிடைத்திடும் (கொடி)

7. பலிபீடம் தாண்டினால்
கொடி மரத்தைக் காணலாம்
பல்வினைகள் மாய்ந்திடும்
பராசக்தி கொடிமரம் (கொடி)

8. தர்மம் காக்கும் கொடிமரம்
அதர்மம் போக்கும் கொடிமரம்
நன்னெறிகள் வளர்ந்திடும்
நமக்கு வந்த கொடிமரம் (கொடி)

9. பிரார்த்தனைகள் நிறைவேறும்
சிவசக்தி கொடிமரம்
பரம்பொருளே கொடிமரமாம்
பாரெல்லாம் சிறந்திடுமே (கொடி)

– திருச்சிற்றம்பலம் –

படைப்பு :

**இரா. பூவிலுடையார்**

அரியநாயகிபுரம்,
நெல்லை மாவட்டம் – 627 862.
11.05.2008

ஓம் தத் சத்

# தத்துவம் தந்திடும் தங்க கொடிமரம்



1. தத்துவத்தை விளக்கிடும்
   தங்க நிறக் கொடிமரம்
   தத்துவமே இறைவனாம்
   தனிப் பெருங் கொடிமரம் (தத்து)

2. தூலமான தத்துவத்தை
   தாங்கி நிற்கும் கொடிமரம்
   தூய்மை அன்பை விளக்கிடும்
   தூய்மையான கொடிமரம் (தத்து)

3. சூக்குமத்தின் தத்துவத்தை
   உள்ளடக்கும் கொடிமரம்
   சாந்தி முக்தி தந்திடும்
   சாந்தமான கொடிமரம் (தத்து)

4. காரணத்தை விளக்கிடும்
   காந்த சக்தி கொடிமரம்
   காரியத்தை நடத்திடும்
   கருணை வடிவ கொடிமரம் (தத்து)

5. பூரணத்தைக் காட்டிடும்
   இன்பம் தரும் கொடிமரம்
   காரணமாம் காரியமாம்
   காருண்ய கொடிமரம் (தத்து)

6. ஆன்மாவின் சொரூப மாம்
இன்பம் தரும் கொடிமரம்
ஆன்ம நேயம் தழைத்திடும்
அன்பு வடிவ கொடிமரம் (தத்து)

7. ஆலயத்தின் மூலமாம்
அருள் பொழியும் கொடிமரம்
ஆலயத்தின் தத்துவத்தை
உணர்த்த வந்த கொடிமரம் (தத்து)

8. வேதமான அறிவு சொரூபம்
வேதாந்தக் கொடிமரம்
ஆகமங்கள் தழைத்திடும்
அறிவான கொடிமரம் (தத்து)

9. மூலப் பொருளை உணர்த்திடும்
மூலமான கொடிமரம்
மூன்று லோகம் போற்றிடும்
முக்தி நல்கும் கொடிமரம் (தத்து)

– திருச்சிற்றம்பலம் –



ஓம் தத் சத்





# திருவண்ணாமலை தல மகிமைப் பாடல்

ஜோதி சொரூபமே அண்ணாமலை – திரு
ஆதி அற்புத ஜோதி மலை

1. மும்மூர்த்தி தோன்றிய அண்ணாமலை
முக்தியும் ஞானமும் நல்கும்மலை
வேதம் தழைத்திடும் அண்ணாமலை
நாதத்தின் உறைவிடம் அண்ணாமலை (ஜோதி)

2. முனிவர்கள் வாழ்ந்திடும் அண்ணாமலை
மோனத்தின் முதலிடம் நல்கும்மலை
தேவர்கள் பூஜிக்கும் அண்ணாமலை
தேவாமிர் தம்தரும் அண்ணாமலை (ஜோதி)

3. சிவலிங்க ஜோதியாம் அண்ணாமலை
சின்மய சொரூபம் அண்ணாமலை
சிவசக்தி அருள்மயம் அண்ணாமலை
சின்மய தவக்கோலம் அண்ணாமலை (ஜோதி)

4. மாபெரும் சிகரம் அண்ணாமலை
மாதவம் பெருகிடும் அண்ணாமலை
பாபங்கள் போக்கிடும் அண்ணாமலை
புண்ணிய பூமியாம் அண்ணாமலை (ஜோதி)

5. தக்ஷிண கைலாசம் அண்ணாமலை
தக்ஷிணா மூர்த்தி அமர்ந்தமலை
தரணியின் கேந்திரம் அண்ணாமலை
தவமும் மோனமும் இணைந்தமலை (ஜோதி)

6. ஆதியில் ஜோதியாம் அண்ணாமலை
அருளின் உறைவிடம் அண்ணாமலை
அருந்தவம் தழைத்திடும் அண்ணாமலை
இருளைப் போக்கிடும் அண்ணாமலை (ஜோதி)

7. ஞானம் தந்திடும் அண்ணாமலை
ஞான சொரூபமாம் அண்ணாமலை
**ரமணர்** வாழ்ந்த அண்ணாமலை
ப்ரம்மம் ஆனதும் அண்ணாமலை (ஜோதி)

8. முப்பெரும் தேவியர் வாழும்மலை
மூன்று லோகமும் வணங்கும்மலை
அண்டத்தின் ஆதாரம் அண்ணாமலை
அறிவின் சொரூபம் அண்ணாமலை (ஜோதி)

9. தவத்திற் கேற்ற தங்கமலை
தவத்தில் விளைந்த காந்தமலை
கிரிவலம் வந்திட முக்திமலை
கிரியைச் சுற்றி லிங்கமலை (ஜோதி)

10. தீர்த்தங்கள் முன்னூறு பெற்றமலை
தீராப் பாபங்கள் தீர்க்கும்மலை
கார்த்திகை தீபத்தில் ஒளிரும்மலை
கண்கொள்ளாக் காட்சியாம் ஜோதிமலை (ஜோதி)

11. நினைத்தால் முக்தி கிடைக்கும்மலை
நீங்காத் துயரம் போக்கும்மலை
வற்றாத அருளைப் பொழியும்மலை
வானவர் வாழும் அண்ணாமலை (ஜோதி)

12. அருணை கிரிக்கு அபயமலை
திருப்புகழ் தந்த அண்ணாமலை
அடியார்கள் துதிக்கும் அண்ணாமலை
ஆலயத்திற் கெல்லாம் ஆதிமலை (ஜோதி)

13. அக்கினித் தத்துவம் உணர்த்தும்மலை
அக்கினிப் பிழம்பாய் இருந்தமலை
அன்பின் ஜோதியாம் அண்ணாமலை
ஆனந்தம் முக்தி நல்கும்மலை (ஜோதி)

14. உண்ணாமுலை தீர்த்தம் உள்ளமலை
உண்ணா முலையாள் அருளும்மலை
ஞானப்பால் தந்திடும் உண்ணாமுலை
ஞானத்தின் உறைவிடம் அண்ணாமலை (ஜோதி)

15. அருணன் ஆட்சி புரியும்மலை
அருணா சலேஸ்வரர் அமர்ந்தமலை
திருஉண்ணா முலையான் ஆட்சிமலை
திருக்கோலக் காட்சியாம் அண்ணாமலை (ஜோதி)

16. கிரிவலம் சென்று திருவருள் பெறுவோம்
குருவருள் திருவருள் பெற்று உய்வோம்
திருவண்ணா மலைதீபம் காண்போம்
திருவுளம் பெற்று முக்தி பெறுவோம் (ஜோதி)

– திருச்சிற்றம்பலம் –



ஓம் தத் சத்

# சிவ ஸ்துதி



தில்லையில் ஆடும் திருமருந்து
வல்வினை போக்கும் அருமருந்து (தில்லை)

1. அண்ணா மலையில் அமர்ந்த மருந்து
அண்டி யோரைக் காக்கும் மருந்து
விண்ணும் மண்ணும் நிறைந்த மருந்து
வானவர் துதிக்கும் வேத மருந்து (தில்லை)

2. இமயத்தில் வாழும் ஈடில்லா மருந்து
இகபர சுகத்தை நல்கும் மருந்து
இராம னுக்காக வந்த மருந்து
இராமேஸ் வரத்தில் அருளும் மருந்து (தில்லை)

3. திருக் குற்றாலத்தில் அருவி மருந்து
அரு மறைகளைத் தந்த மருந்து
அகத்திய முனிவர் துதித்த மருந்து
அகத்தில் உறையும் நாத மருந்து (தில்லை)

4. நாயன்மார் துதித்த நாயகன் மருந்து
நான்கு வேதங்கள் போற்றும் மருந்து
**மாணிக்க வாசகர்** கண்ட மருந்து
மன்றுள் ளேநின் றாடும் மருந்து (தில்லை)

5. நம சிவாய பொன் மருந்து
எமனைக் காலால் உதைத்த மருந்து
பிட்டுக்கு மண்ணைச் சுமந்த மருந்து
பிரம்பால் அடியும் பட்ட மருந்து (தில்லை)

6. கண்ணப்பனை நன்றாய் சோதித்த மருந்து
கண்களை மீண்டும் கொடுத்த மருந்து
பிள்ளைக் கறியைக் கேட்ட மருந்து
பலஜென்ம பாபம் போக்கும் மருந்து (தில்லை)

7. ஆனந்த தாண்டவம் ஆடிய மருந்து
அழகான பிறையை சூடிய மருந்து
அடியார்கள் உள்ளத்தில் உறையும் மருந்து
அன்பருக் கெல்லாம் அருளும் மருந்து (தில்லை)

8. சடாமுடிக் கோலம் கொண்ட மருந்து
சர்ப்பத்தை கழுத்தில் அணிந்த மருந்து
திருசூலம் கரத்தில் ஏந்திய மருந்து
திருநீர் பூசிடும் தவக்கோல மருந்து (தில்லை)

9. சக்திக்கு இடப்பாகம் அளித்த மருந்து
முக்திக்கு ஞானம் தந்த மருந்து
முக்கண்கள் பெற்ற சிவ மருந்து
மூலா தார சின்மய மருந்து (தில்லை)

10. காசிமா நகரில் மோட்ச மருந்து
கங்கா தேவியைக் கொண்ட மருந்து
கொடிய விஷத்தை உண்ட மருந்து
கருணா சாகர அன்பு மருந்து (தில்லை).






ஓம் தத் சத்

# இறைவன் எங்கே உள்ளான் ?



இறைவனைத் தேடும் ஓ ! மனிதா !
உன்னை உணர்ந்திடு ஏ ! மனிதா ! – இறை

1. கோவில் குளத்தில் தேடுகிறாய் – நீ
குழப்பத்தில் என்றும் வாடுகிறாய்
விரதங்கள் காத்தும் தேடுகிறாய் – நீ
உடலை வாட்டித் தேடுகிறாய் – இறை

2. மலைகள் ஏறித் தேடுகிறாய் – உனக்கு
மார்க்கம் எதுவும் தெரியலயா ?
அலையெனும் ஆசையில் வாடுகிறாய் – உந்தன்
அலைமனம் எப்போது அடங்கிவிடும் ? – இறை

3. ஆசையைக் குறைக்க வழிஇல்லையா – உன்னுள்
மாசுகள் மிகவும் படிந்திடுதே !
ஆசைகள் கடந்தால் இன்பமயம் – உன்னுள்
நேசம் வளர்ந்தால் சிவமயமே ! – இறை

4. உன்னுள் உறையும் தெய்வத்தை – நீ
உணர்ந்து செயல்படு ஓ ! மனிதா !
மனத்தைக் கல்லாய் ஆக்காதே – நீ
மனத்தில் இரக்கம் கொள்வாயே – இறை

5. அன்பும் அறிவும் ஒன்றேதான் – நீ
ஆலயம் சென்றால் உணர்வாயோ !
பலகலை கற்றும் தெளிவாயோ ! – என்றும்
புலனிஇன்பம் உனக்குத் தடைகள் தான் – இறை

6. உள்ளத்தில் அன்பை நிரப்பிடுவாய் – நீ
உள்ளக் கதவைத் திறந்திடுவாய்
உள்ளத்தில் தேவனை உணர்ந்திடுவாய் – அவன்
உள்ளும் புறமும் ஒளிர்வானே ! – இறை

7. ஆன்மாவே தான் உன் சொரூபம் – நீ
அகத்தில் ஆழ்ந்து காண்பாயே !
ஆலயத் தத்வம் உனக்குள்ளே – நீ
ஆன்ம லயத்தில் உணர்வாயே ! – இறை

– திருச்சிற்றம்பலம் –





ஓம் தத் சத்

# சிவானந்த போதம்

மனிதரிலும் பறவையுண்டு விலங்குண்டு

கல்லுண்டு மரமு முண்டு

மனதரிலு நீர்வாழுஞ் சாதியுண்டு

அநேககுல மனிதருண்டு



மனிதரிலு மனிதருண்டு வானவரு

மனிதராய் வருவதுண்டு

மனிதரிலே பிறப்பறுக்க வந்ததே

அருமையென வகுத்தார் முன்னோர்

திருச்சிற்றம்பலம்









ஓம் தத் சத்

## ஸ்ரீமத் அமலானந்த சுவாமிகளின் 54-ம் ஆண்டு குரு பூஜைப் பெருவிழா கொடியேற்றப்பாடல்

அடியார்கள் கொடியேற்றுவோம் – நாம்
ஆனந்தம் பெற்றிடுவோமே – அடியார்

1. இருள்போக்கும் ஞானக்கொடி ஏற்றுவோம் – நாம்
அருள் கொடுக்கும் கருணைக்கொடி ஏற்றுவோம்
அத்வைத தத்வக் கொடி ஏற்றுவோம் – நாம்
ஆன்ம நேய நேசக்கொடி ஏற்றுவோம் – அடியார்

2. தத்துவத்தின் கொள்கைக்கொடி ஏற்றுவோம் – நாம்
சத்சங்க இலட்சியக்கொடி ஏற்றுவோம்
சாந்தி தரும் முக்திக்கொடி ஏற்றுவோம் – நாம்
சற்குருவின் பொற்கொடியை ஏற்றுவோம் – அடியார்

3. மோனத்தின் மோட்சக்கொடி ஏற்றுவோம் – நாம்
ஞானத்தின் அன்புக்கொடி ஏற்றுவோம்
விவேகத்தின் அறிவுக்கொடி ஏற்றுவோம் – நாம்
வேதாந்த வெற்றிக்கொடி ஏற்றுவோம் – அடியார்

4. பாபம் போக்கும் புனிதக்கொடி ஏற்றுவோம் – நாம்
புனிதமான தர்மக்கொடி ஏற்றுவோம்
சத்தியத்தின் ஜோதிக்கொடி ஏற்றுவோம் – நாம்
சாந்தத்தின் அமைதிக்கொடி ஏற்றுவோம் – அடியார்

5. மும்மலத்தை இன்று இங்கே அறுத்திடுவோமே – நாம்
மோட்சத்தை நமது மூச்சாய் எண்ணிடுவோமே !
இலட்சியப் பாதையில் நாம் சென்றிடுவோமே – நாம்
இலட்சியத்தை உறுதியாய் அடைந்திடுவோமே – அடியார்

லோகா சமஸ்தா சுகினோ பவந்து (3 தடவைகள்)
ஓம் சாந்தி : சாந்தி : சாந்தி :



ஓம் தத் சத்

# நீ யார் ?

(நந்தவனத்தில் ஓர் ஆண்டி என்ற பாடல் மெட்டு)

1. தேவனாய் மாறிட முயல்வாய் – நீயும்
தேகப் பற்றினை நீக்கிடு மனிதா !
சேவை செய்திட வந்தாய் – இங்கே
கற்றவை யாவும் கூடவே வருமா ? (தேவ)

2. உயர்கல்வி கற்றாலும் இங்கே – உனக்கு
உய்யும் வழியும் கிடைக்குமா சொல்லு !
தனத்தில் உயர்ந்தாலும் இங்கே – உனக்கு
தவவாழ்க்கை வாழ்ந்திட இயலுமா சொல்லு ! (தேவ)

3. சத்சங்கம் சார்ந்திடப் பழகு – நீதான்
சான்றோரின் சகவாசம் நாடியே தேடு !
உற்றாரும் சுற்றமும் நிலையா – நீயும்
பற்றையும் அறுத்து சற்குரு நாடு ! (தேவ)

4. பாபம் செய்திட அஞ்சு – நீயும்
பாபம் தொலைந்திட நற்செயல் ஆற்று !
பதவியும் பட்டமும் நிலையா – இந்தப்
பாரினில் உனக்குச் சுகமேதும் இல்லை ! (தேவ)

5. வேதாந்தம் கற்றிடு நன்றாய் – நீயும்
வீண்பேச்சுப் பேசி உழலாதே மனிதா !
வாதம் புரிவதை நிறுத்து – மனித
வாழ்க்கையின் லட்சியம் நன்றாக உணரு (தேவ)

6. காலத்தில் வருவான் காலன் – அவன்
காலடி உன்மேல் படவும் வேண்டாம் !
குருவருள் திருவருள் உனக்கு – நன்கு
கடைத்தேற வழியும் இன்றே தருமே ! (தேவ)

7. கருமத்தின் விளைவால் பிறந்தாய் – நீயும்
கருமத்தின் விளைவை நேர்கொள்வாய் நாளும் !
இருவினை அறுந்திடப் புரிவாய் – நல்ல
கர்ம யோகம் செய்துமே உய்வாய் ! (தேவ)

8. உலகத்தின் தன்மை அறிவாய் – இந்த
உலகப் பொருளும் மாயையின் தோற்றம் !
உண்டு கழிப்பதும் வீணே – நீயும்
தூங்காமல் தூங்கி விழித்திரு மனிதா ! (தேவ)

9. பொய்யே மெய்யாய் தோன்றும் – இந்த
வையகம் யாவும் அழியும் ஒரு நாள் !
மெய்யனைப் பற்றியே நில்லு – நீயும்
மெய்யில் கலந்திட வாழ்வாய் தினமும் (தேவ)

10. பேதம் களைவது நலமே – சகல
பேதங்கள் களைந்தால் அத்வைதமாகும் !
போதம் நிலைத்திட செய்வாய் – தினமும்
தியானம் செய்து பெறுவாய் மோட்சம் ! (தேவ)

11. உன்னோடு வருவது என்ன – உந்தன்
உடமைகள் செல்லாக் காசுகள் தானே !
உன்னுடல் அழிவது திண்ணம் – உந்தன்
உடலைச் சதமென எண்ணாதே மனிதா ! (தேவ)

12. மனக்கோட்டை கட்டாதே மனிதா ! – நீயும்
மனம் போன போக்கில் போகாதே மனிதா !
கனமான ஆசையை விடுவாய் – நீயும்
கனவென்னும் வாழ்வை நம்பாதே மனிதா ! (தேவ)

13. கனவும் நனவும் ஒன்றே – நீயும்
உனது சொரூபத்தை காண்பாய் உள்ளே !
மனமென்ற வானரம் உன்னை – பெரும்
வனமென்ற காட்டில் வாட்டி வதைக்கும் (தேவ)

14. மெய்ப் பொருள் அப்பொருள் காண்பாய் – நீயும்
மெய்யில் ஒடுங்கிட சாதனை செய்வாய்
மாயை கடந்திட தியானம் – செய்து
தூயவன் அருளைப் பெறுவாய் தினமும் (தேவ)

15. ஜோதி சொரூபம் நீயே – உன்னுள்
ஜோதியின் தரிசனம் காண்பாய் நாளும்
சுயம் ஜோதி ஆன்மாவும் நீயே – உன்
அகத்தில் காண்பாய் சுகத்தின் அருமை ! (தேவ)

– திருச்சிற்றம்பலம் –

# Sri Ramanasramam

Sri Ramanasramam PO, Tiruvannamalai, Tamil Nadu - 606 603.



ஸ்ரீமத் அமலானந்த சுவாமிகள் மடாலய காப்பாளர்
**ஸ்ரீ இரா. பூவில் உடையார் சுவாமிகள்** அவர்களுக்கு,

தங்களது 17–11–2006 தேதயிட்ட அன்பு மடலும், சில பாடல்களின் நகலும் மூன்று புத்தகங்களும் கிடைத்துப் பார்வையிடப்பட்டன. சாதாரண மக்களும் எளிதில் புரிந்து கொள்ளும் வண்ணம் இயற்றப்பட்டுள்ள எளிய ஆன்மீகப் பாடல்கள் பாராட்டுக்குரியனவாகும்.

35 ஆண்டுகளுக்குமுன் ஆனந்த விகடனில் வெளியான "**அருணாசல மகிமை**" தொடர் பல ஆயிரம் தமிழன்பர்களை "ஞானத் தபோதனரை வாவென்று" அழைக்கும் அண்ணாமலைக்கு ஆட்படுத்தி ஸ்ரீ ரமண மகரிஷிகளின்பாலும் ஈடுபாடு கொள்ளச் செய்துள்ளது. இவ்வன்பர் பட்டியலில் தாங்களும் உள்ளதை அறிய மகிழ்ச்சி.

பகவான் ரமணரது வரலாறு மற்றும் தத்துவங்களை மேலும் அறிய, ஆச்ரம வெளியீடுகளை படிக்கும் ஆர்வத்தை வெளியிட்டுள்ளபடியால் இக்கடிதத்துடன் சில புத்தகங்களை ஸ்ரீபகவான் பிரசாதமாக அனுப்பியுள்ளோம்.

கார்த்திகை தீபத் திருவிழா நாட்களில் இடவசதி நெருக்கடி மற்றும் அலுவலக வேலை, ஏற்பாடுகளை கவனிக்க வேண்டியுள்ளதால், தாங்கள் அடுத்த மாத மத்தியில் அல்லது ஜனவரி பத்து தேதிக்குமேல் ஆச்ரமம் வந்து, தாங்கள் எண்ணியுள்ள தெய்வ காரியத்தைக் குறித்து அளவளாவிச் செல்லுமாறு கேட்டுக் கொள்கிறோம்.

ஸ்ரீ பகவான் பணியில்

**வே.சு. ரமணன்**

தலைவர்

ஓம் தத் சத்

ஸ்ரீ குருப்யோ நம :



ராகம் : நாத நாமக்ரியா

# பகவான் ஸ்ரீ ரமணானந்த மாலை

சங்கரா சிவசங்கரா சிவசங்கரா ரமணா !
சங்கரா சிவசங்கரா சிவசங்கரா ரமணா ! (சங்கரா)

1. ப்ரம்மா னந்தம் அறிவா னந்தம்
சங்கர ரமணா ஓம்
பரமா னந்தம் க்ருபா னந்தம்
சங்கர ரமணா ஓம் (சங்கரா)

2. கமலா னந்தம் வித்யா னந்தம்
சங்கர ரமணா ஓம்
விமலா னந்தம் விவேகா னந்தம்
சங்கர ரமணா ஓம் (சங்கரா)

3. ஆத்மா னந்தம் அருளா னந்தம்
சங்கர ரமணா ஓம்
அமிர்தா னந்தம் தேவா னந்தம்
சங்கர ரமணா ஓம் (சங்கரா)

4. துக்க நிவாரணம் சோக வினாசகம்
சங்கர ரமணா ஓம்
தத்பதா னந்தம் சாஸ்வதா னந்தம்
சங்கர ரமணா ஓம் (சங்கரா)

5. பாப விநாசகம் சங்கட நாசனம்
சங்கர ரமணா ஓம்
பிரேமா னந்தம் பேரா னந்தம்
சங்கர ரமணா ஓம் (சங்கரா)

6. போதா னந்தம் நாதா னந்தம்
சங்கர ரமணா ஓம்
அபேதா னந்தம் அத்வைதா னந்தம்
சங்கர ரமணா ஓம் (சங்கரா)

7. முக்தா னந்தம் மௌனா னந்தம்
சங்கர ரமணா ஓம்
மும்மல நாசன துரியா னந்தம்
சங்கர ரமணா ஓம் (சங்கரா)

8. அருணா னந்தம் அருளா னந்தம்
சங்கர ரமணா ஓம்
கருணா னந்தம் காருண்யா னந்தம்
சங்கர ரமணா ஓம் (சங்கரா)

9. சுந்தரா னந்தம் சத்யா னந்தம்
சங்கர ரமணா ஓம்
சச்சிதா னந்தம் அச்சுதா னந்தம்
சங்கர ரமணா ஓம் (சங்கரா)

— திருச்சிற்றம்பலம் —



ஓம் தத் சத்

## 1. தெய்வ மஹாாயக்ஞம்

ராகம் : சிந்துபைரவி

அருளாட்சி புரியும் மதுரை மீனாட்சி
அபயம் தந்து அருளைப் பொழிந்தாள் – அருளாட்சி

1. உலக மாயையில் உழன்று விழாமல்
உய்யும் வழிக்கு ஞானம் நல்கிட
உவகை கொண்டு தன்வசம் ஆக்கிட
**வெங்கட ராமன்** இதயத்தில் அமர்ந்தாள். – அருளாட்சி

2. உடலை மறந்து உணவை மறுத்து
உள்ளே தன்னை உணரும் வண்ணம்
உள்ளத்தை அமைதி ஆட்கொள்ளும் வகையில்
அம்மன் சன்னதி அடைந்தான் பாலகன். – அருளாட்சி

3. அமைதிக் கடலில் ஆழ்ந்துமே தினமும்
ஆலய தரிசனம் செய்து வந்தான்
இரவும் பகலும் இறைவன் நாட்டத்தில்
இறப்பை வென்றிடும் வழியில் முனைந்தான். – அருளாட்சி

4. பள்ளிக் கல்விக்கு முடிவும் வந்தது
படிக்கும் பாடம் கூடவும் வருமா?
பிறவிநோய் போக்கும் வழியும் காட்டுமா?
பிறப்பிலா வாழ்வைப் பற்றவும் துணிந்தான். – அருளாட்சி

5. உள்ளம் உருகி கண்ணீர் வடித்தான்
உலகியல் வாழ்வு இறைவனைக் காட்டுமா?
சோகத்தில் மூழ்கி உறவை மறந்தான்
சொக்கநாதன் பாதம் பற்றிட நினைத்தான். – அருளாட்சி

6. பள்ளிப் படிப்பில் நாட்டமும் இல்லை
பகவானை நினைத்து தியானம் செய்தான்
அண்ணன் வெறுப்பு நெருப்பாய் ஆனது
அப்பனை அடைந்திட அருணை சென்றானே.– அருளாட்சி

7. உடலென்ற கட்டையும் இடுகாட்டில் எரியும்
உணர்வென்ற உயிரும் இறந்து விடுமா?
நானென்ற உணர்வும் மறைந்துவிடுமா?
நான் என்ற உணர்வு சாட்சியாய் இருந்தது. – அருளாட்சி

8. அப்பனைக் கண்டிட உள்ளமும் துடித்தது
அண்ணாமலை செல்ல ஆர்வம் எழுந்தது
வீட்டைத் துறந்தான் பால சந்நியாசி
வீடுபே ரடைய பயணம் செய்தான். – அருளாட்சி

9. தனக்குள் தெய்வம் இருப்பதை உணர்ந்திட
தலைவனைத் தேடி அருந்தவம் ஆற்றிட
மலையில் உறையும் அருணன் நாதனை
பலமைல் கடந்து அடைந்தான் பாலகன். – அருளாட்சி

---

– திருச்சிற்றம்பலம் –



ஓம் தத் சத்

## உ. ரிஷி மஹாயக்ஞம் (ப்ரம்ம யக்ஞம்)

ராகம் : யதுகுல காம்போதி

அருந்தவம் புரிந்து தன்னை உணர்ந்திட
அருணாசலம் சென்றான்
அருந்தவத்தாலே வெங்கடராமனும்
மகரிஷி ஆனாரே — அருந்தவம்

1. கௌபீனம் கட்டி குடுமி களைந்து
தவக்கோலம் பூண்டானே
வருண பகவான் ஆனந்தம் கொண்டு
மழையால் நனைத்தானே. — அருந்தவம்

2. நனைந்த வண்ணம் பாலயோகி
சன்னதி நுழைந்தானே
ஆனந்தக் கண்ணீர் கன்னம் நனைத்திட
வணங்கி மகிழ்ந்தானே. — அருந்தவம்

3. தன்னை மறந்து தவநிலை ஓங்கிட
தரையில் அமர்ந்தானே
கண்களை மூடி பகவானை நினைந்து
மௌனமாய் இருந்தானே. — அருந்தவம்

4. புலன் பொறி அடக்கி பேசாமௌன
விரதம் கொண்டானே
பொன்போல் மனத்தை அன்பால் நிரப்பி
பொன்னடி பற்றினானே. — அருந்தவம்

5. தவநிலை உயர்ந்து அருளொளி பெற்று
ஆனந்தம் அடைந்தாரே
தஞ்சமென் றோர்க்கு அருளைப் பொழிந்து
தவத்தில் ஏகமானார். – அருந்தவம்

6. வருவோர் குறைகள் கணத்தில் போக்கி
ஆனந்தம் தந்தாரே
அனுபவ ஞானத்தால் அனுபூதி பெற்று
தன்னை உணர்ந்தாரே. – அருந்தவம்

7. **ரமண மகரிஷி** தவத்தால் அனைத்து
மக்களைக் கவர்ந்தாரே
இனமதம் கடந்து அனைவரும் அருகில்
வந்து குவிந்தனரே. – அருந்தவம்

8. மேலை நாட்டு பக்தர்கள் பலரும்
சரணம் அடைந்தனரே
மோன நிலையை நேரில் கண்டிட
முனிவர்கள் வந்தனரே. – அருந்தவம்

9. பக்தர்கள் குறைகள் அருள் நோக்காலே
போக்கி அமர்ந்தாரே
மோனமும் அருளும் இணைந்து ஒன்றிட
மௌனத்தில் ஆழ்ந்தாரே. – அருந்தவம்

10. தீராத நோயும் தீர்ந்திட அருளால்
கருணையும் கொண்டாரே
தீராத சோகமும் அகன்றிட நொடியில்
தவபலம் பெற்றாரே. – அருந்தவம்

11. காண்போர் உள்ளம் கரைந்து நெகிழ்ந்திட
தவஞானி ஆனாரே
பேசாமல் பேசி அருள்மழை பொழிந்து
ஆனந்தம் தந்தாரே. — அருந்தவம்

12. அருள் நோக்காலே அனைவரும் வந்து
தொண்டு புரிந்தனரே
அன்பும் அருளும் ஒருங்கே பெற்று
சிவமயம் ஆனாரே. — அருந்தவம்

13. முனிவர்க் கெல்லாம் மூத்தவர் என்பதை
மௌனத்தால் காட்டினாரே
**நான்யார்** என்ற தத்துவம் தன்னை
தனக்குள் உணர்ந்தாரே. — அருந்தவம்

14. தவக்கோலக் காட்சி கண்ட அனைவரும்
தம்மை மறந்தனரே
தவமே பொறுமை மௌனத்தில் நிலைத்து
தன்னிலை அடைந்தாரே. — அருந்தவம்

— திருச்சிற்றம்பலம் —



ஓம் தத் சத்

## 3. பித்ரு மஹாயக்ஞம்

ராகம் : யதுகுல காம்போதி

1. மாதா பிதா குரு தெய்வம் என்பதை
வேதம் புகன்றிடும்
மானிட வாழ்க்கையின் லட்சியம் இதுவே
என்றும் மறவோமே. – மாதா

2. மாதாவின் பாசம் ஞானியின் நேசம்
ஒன்றாய் கலந்திடுமா ?
தனயனைப் பிரிந்த தாயின் உள்ளம்
சோகத்தில் மூழ்கியது. – மாதா

3. பால சந்நியாசி வெங்கட ராமனும்
மௌனத்தில் ஆழ்ந்து விட்டான்
தவக்கோல நிலையில் தாயின் உள்ளம்
தவித்து ஏங்கியது. – மாதா

4. சந்நியாசி உள்ளம் தவத்தால் நிறைந்து
தலைவனை நினைத்ததுவே
**அழகம்மாள்** மனமும் புதல்வன் நிலையை
எண்ணிப் புலம்பியது. – மாதா

5. புதல்வன் தவத்தால் அன்னையின் உள்ளம்
அன்பாய் மாறியது
தாயும் இதனால் பக்தையுமாகி
தொண்டும் செய்தாளே. – மாதா

6. தொண்டருக் கெல்லாம் சேவை செய்தாள்

தூய அன்னையவள்

தூய்மை பெற்று தெய்வமு மாகி

தரணியில் உயர்ந்தாளே. — மாதா

7. முதுமை அடைந்து மகனின் சேவை

முழுதும் பெற்றாளே

முக்தியும் பெற்றிட ரமண மகரிஷி

தவத்தைத் தந்தாரே. — மாதா

8. அன்னையின் நினைவிடம் ஆலயம் ஆனது

மகரிஷி தவத்தாலே

பித்ரு யக்ஞம் நிறைவாய் செய்து

பேரின்பம் பெற்றாரே. — மாதா

9. தாயும் மகனும் தரணியில் பெருந்தவம்

ஆற்றி உய்ந்தனரே

தரணிக்குத் தந்த நல்லுப தேசம்

நாமும் பெறுவோமே. — மாதா

— திருச்சிற்றம்பலம் —

ஓம் தத் சத்

## 4. அதிதி மஹாயக்ஞம்

ராகம் : சிந்து பைரவி

தொண்டுள்ளம் இறைவன் இல்லம் என்பது சத்யம்
தொண்டினாலே முக்தி பதம் பெற்றிடலாமே. – தொண்டு

1. அன்பேதான் சிவமென்றார் திருமூலரே
அன்புவழி ரமணர் சென்று முக்தி பெற்றாரே
திக்கற்றோர் நலம்பெறவே அபயந் தந்தாரே
திக்கெட்டும் பரவியது ரமணர் கீதமே. – தொண்டு

2. நல்லஉள்ளம் படைத்தோ ரெல்லாம் நிதியும் வழங்கினர்
நற்சேவை புரிந்திடவே நிதியும் குவிந்தது
இன்றுவரை அன்னதானம் இடைவிடாமலே
என்றும்போல் தொடர்கிறது ஆச்ரமத்திலே – தொண்டு

3. மகரிஷியின் நேசமெல்லாம் தொண்டானது
மகேசனின் அருளெல்லாம் நிறைந்து வந்தது
பசித்த வயிறு நிரம்பியதால் உள்ளம் குளிர்ந்தது
பகவானின் அருள் மழையும் பொழிந்து வந்தது. – தொண்டு

4. பறவையினம் விலங்கினமும் பக்தராயினர்
பகவானின் அன்புக்கு அடிமையாயினர்
பகவானின் அரவணைப்பில் ஒன்றாயினர்
பரமபதம் பெறுவதற்கும் தகுதியாயினர் – தொண்டு

5. அனைத்துயிரும் ஆன்மரூபம் என்பதுண்மையே
அனைத்திலும் இருப்பதெல் லாம் சிவசொரூபமே
அனைத்திலும் பரத்தைக் கண்டார் ரமணமகரிஷி
ஆன்மபோதம் பெற்று அவரும் தன்னிலை யானார் – தொண்டு

– திருச்சிற்றம்பலம் –

ஓம் தத் சத்

## 5. பூத மஹாயக்ஞம்

ராகம் : சிந்து பைரவி

இறைவன் படைப்பில் யாவரும் ஆன்ம சொரூபமே
மறைகள் சொல்லும் பேருண்மை இதுவே யாகுமே — இறைவன்

1. ஈஸா வாஸ்யம் இதம் சர்வம் வேதவாக்கியம்
நேசத்தின் உறைவிடம் ஈசன் பாதமே
பாசம்போக்கி நேசம் கொண்டால் ஆன்ம போதமே
வாசனைகள் கடந்துவிட்டால் ஆன்ம சொரூபமே.— இறைவன்

2. மகரிஷிகள் அன்பு பூண்டார் பேதமின்றியே
மாதவத்தில் திளைத்து விட்டார் அன்பின் வழியிலே
மகேசனின் படைப்பெல்லாம் ஆன்ம சொரூபமே
மாபெரும் தத்துவத்தில் ஆழ்ந்துவிட்டாரே. — இறைவன்

3. அன்னதானம் பெறுவதெல்லாம் வாயில்லா ஜீவன்
அனைத்துயிரும் ஈசன்வசம் என்பது உண்மை
அனைத்துயிர் நேசத்தினால் உயர்தவம் பெற்றார்
அன்பினாலே சேவைசெய்து மகரிஷி யானார். — இறைவன்

4. வானரங்கள் ஆசிரம பக்த ராயினர்
வீட்டில் வாழும் விலங்கெல்லாம் நண்பரா யினர்
வினங்கினம் பறவையினம் தொண்டராயினர்
வாழ்க்கையின் தத்துவத்தை உணர்ந்து கொண்டனர்— இறைவன்

6. **கருப்பன்** என்ற நாயினமும் பயம் தெளிந்தது
பக்தர்களின் அன்பனாக மாறிவிட்டது
**கமலா** என்ற நாயினமும் தொண்டு செய்தது
மலைசுற்றி வலம்வரவே உதவி செய்தது. – இறைவன்

7. கல்விக்கூடம் செல்லாத விலங்கி னங்களும்
கல்விதனைக் கற்றுக்கொண்ட அற்பு தங்களும்
கலப்பில்லா அன்புதனை செலுத்திக் கொண்டதும்
குருவின் சேவை செய்து முடிவில் முக்தி பெற்றன. – இறைவன்

8. குருவின் பெருமை புரிந்துகொண்டால் மிகுந்த நன்மையே
திருவருளும் பெற்றுய்ய வழியும் கிடைக்குமே.
குருவும் திருவும் ஒன்று என உணர்ந்துவிட்டாலே
குருவழியே முக்திக்கு வழியும் காட்டுமே. – இறைவன்

– திருச்சிற்றம்பலம் –

ஓம் தத் சத்

# ஆசை அலை எது ? ஞான அலை எது ?

ராகம் : சிந்து பைரவி

அலை கடல் ஞானமே ! – நம்
விலை மதியாச் செல்வமே !
ஆசையாலே துன்பம் வரும் – நம்
ஆசைக்கும் எல்லை யுண்டோ ? – அலை

1. ஆழ்கடலில் முத்திருக்கும் – நம்
ஆசையாலே தேடி வரும்
கோடி கோடி வந்தாலும் – அது
ஓடி ஓடி மறையுமே ! – அலை

2. ஊழ்வினை யால் வந்தோமே ! நாம்
பாழ் மனத்தால் மாய் கின்றோம
ஊழ்வினையும் தீருமோ ! நம்
பாழ் மனமும் ஒயுமா ? – அலை

3. கானல் நீர் உலகத்திலே – நாம்
கனலாய் காய் கின்றோம்
விழலுக்கு நீர் பாய்ச்சியே – நாம்
வெந்துமே மடிகின்றோம் – அலை

4. உண்டிக்கு இரை தேடி – நாம்
வீணர்க ளாய் அலைகின்றோம்
மண்பாண்டம் போலவே இங்கே நாம்
மண்ணிலே மடிகின்றோம் – அலை

5. மனைவி மக்கள் பந்தமே ! நம்மை
மடிய வைத்து மாய்க்குமே
பிள்ளைப் பாசம் என்றுமே ! நாம்
பெருந் தொல்லை படுகின்றோம் – அலை

6. கோடி இன்பம் தந்தாலும் – அது
வாடியே வதைத்து விடும்
கொடி மரம் கட்டினாலும் – அது
குப்பை மேடாய் ஆகிவிடும் – அலை

7. மண் சேர்த்து பொன் சேர்த்து – நாம்
கண் போலே காக்கின்றோம்
மண்ணும் பொன்னு ஒரு நாள் – பின்
மண்ணோடு சேர்ந்து விடும் – அலை

8. குருவில்லா வித்தை பாழ் – ஈசன்
அருளில்லா பக்தி வீணே !
பொறுமை யில்லா சாதனை வீண் – நாம்
பொறுமை காத்து உய்வோமே ! – அலை

9. பற்றின்றி வாழ்தல் நலம் – நாம்
பற்றற வாழ்ந்து உய்வோம்
பற்றுப் பாசம் தொல்லையே ! நாம்
கற்றதெல்லாம் வாராது – அலை

10. குருவின்றி ஞானம் இல்லை – நமக்கு
கருவின்றி உயிரும் இல்லை
கருவே தான் உயிராகும் – நம்
குருவே தான் வழித்துணையே ! – அலை

11. பகுத்தறிவோம் உலகத்தை – நாம்
பகவானை நினைவோம் தினம்
நமது வாழ்க்கை நம் கையில் – நாம்
ஞானம் பெற உழைப்போமே ! – அலை

12. உண்டு தூங்கி வாழ்தல் வீணே – நாம்
உழைப்பில் நாளைக் கழிப்போமே !
உள்ளத்தில் அன்பு கொண்டு – நாம்
உள்ளத்தில் உணர்வோம நம்மை – அலை

13. தொண்டிலே வாழ்வோம் தினம் – நாம்
தொண்டிலே ஈசன் காண்போம்
மண்டுக வாழ்க்கை வேண்டாம் – நாம்
மன்னுயிர் சேவை செய்வோம் – அலை

14. நம்மையே உணர்தல் நலம் – நாம்
எமனையும் வெல்வோமே !
நாமஸ் மணைம் சொல்வோம் – நாம்
நன்னிலம் பெறு வோமே ! – அலை

15. நமச்சிவாய மந்திரம் – நாம்
நாளும் சொல்வோம் தினமே
ஆணவம் அழிப்போமே – நாம்
இறைவனை உணர்வோம் உள்ளே ! – அலை

-----

ஓம் தத் சத்

## (ஒரு இல்லற ஞானியின் புலம்பல்)

## கேட்டது கிடைக்குமா? நினைத்தது நடக்குமா?

1. கேட்டது கிட்டுமா, நினைத்தது நடக்குமா
போனது வருமா, வந்தது நிலைக்குமா
இருப்பது தங்குமா, இருவினை நீங்குமா
சேர்த்தது தங்குமா, ஊழ்வினை அகலுமா ?

2. காதால் கேட்டேன் கதையாய் முடிந்தது
வாயால் கெட்டேன் வாதம் வளர்ந்தது
காலால் நடந்தேன் காலும் ஓய்ந்தது
பயணம் செய்தேன் பயணம் நீண்டது

3. வாழ நினைத்தேன் வழக்கில் முடிந்தது
படிக்க நினைத்தேன் பாதியில் நின்றது
உற்றாரை நம்பினேன் பகையில் முடிந்தது
கற்றோரை நம்பினேன் கானல்நீர் ஆனது

4. பிள்ளையை நம்பினேன் பெரும்பகை ஆனது
பெண்ணை நம்பினேன் ஏமாற்றம் வந்தது
சொத்தை நம்பினேன் வேதனை தந்தது
சொந்தத்தை நம்பினேன் துயரம் வந்தது

5. இளமை வந்தது மகிழ்ச்சி தந்தது
இளமை வயதில் கவர்ச்சியும் வந்தது
முகத்தில் கவர்ச்சி பொங்கி எழுந்தது
சுகத்தில் இன்பம் பெருகி வந்தது

6. இளமையில் வறுமை என்னை வதைத்தது
பழமை வாழ்வில் களிப்பும் வந்தது
தந்தையின் மறைவு வருத்தம் தந்தது
தாயின் அன்பு என்னை வளர்த்தது

7. இளமைத் துடிப்பில் இதயம் மலர்ந்தது
இனம் புரியாத புதுமை பிறந்தது
இதயத்தின் ஊற்றில் கவிதை பிறந்தது
இன்ப ஊற்றாய் இதயம் கனிந்தது

8. நல்லோர் நட்பும் சமயத்தில் வந்தது
நல்வழி வந்திட காலமும் வந்தது
சரியான வழியும் நன்றே கிடைத்தது
சங்கடம் தீர்ந்திட தைமாதம் பிறந்தது

9. தொழிற்கல்வி கற்றிட உதவியும் கிடைத்தது
தொண்டுக்கும் நல்ல வாய்ப்பும் கிடைத்தது
தொண்டினால் மனமும் நிறைந்து விட்டது
தொண்டினால் வாழ்வு நிறைவு பெற்றது

10. தொண்டினால் இதயம் தூய்மை பெற்றது
தொண்டும் அன்பும் உயர்வு தந்தது
தூயவன் துணையால் வழியும் பிறந்தது
துக்க நிவர்த்தியும் குருவால் ஆனது

11. காலத்தின் அருமை நன்றாய் புரிந்தது
காலனை வெல்லும் வழியும் கிடைத்தது
மூல மூர்த்தியின் அருளும் கிடைத்தது
மும்மலம் அறுத்திடும் அருளும் கிடைத்தது

12. அஞ்ஞான இருளும் அறவே அகன்றது
ஆசைக் கோட்டையும் இடிந்து விழுந்தது
ஆசான் அருளால் உபதேசம் கிடைத்தது
ஆசான் ஆசியால் அமைதி கிடைத்தது

13. சத்சங்கம் என்னை உய்ய வைத்தது
சற்குரு வாக்கு அருளைத் தந்தது
சன்மார்க்க நெறியில் தவமும் கிடைத்தது
சான்றோர் நட்பால் உயர்வும் கிடைத்தது

14. முக்தி கிடைக்கும் வழியும் பிறந்தது
முதலும் முடிவும் இணைந்து வந்தது
முக்கண்ணன் காட்சி அகத்தில் கிடைத்தது
முப்பெருந் தேவியர் அருளும் கிடைத்தது

15. காந்திஜி வாழ்க்கை என்னைக் கவர்ந்தது
காந்த சக்தியால் என்னை ஈர்த்தது
நேருவின் தரிசனம் நன்றாய் கிடைத்தது
நேருபோல உழைத்திட சிரத்தையும் வந்தது

16. அன்பும் பண்பும் என்னுள் வளர்ந்தது
அன்பின் துணையால் ஆணவம் அகன்றது
ஆசான் அருளால் கவிதையும் வந்தது
ஆசான் அன்பினால் எல்லாம் வந்தது

17. இறைவன் அருளால் இசையும் வந்தது
இறைவன் பெயரில் பாடலும் வந்தது
இன்னிசைப் பாடல் பாடவும் முடிந்தது
அனைவர் இதயத்தைக் கவர்ந்து இழுத்தது

18. மேடைப் பேச்சுக்கும் வாய்ப்புக் கிடைத்தது
மேடைப் பேச்சும் சரளமாய் வந்தது
சான்றோர் மத்தியில் மதிப்பும் கிடைத்தது
சன்மார்க்க நெறியின் பேச்சும் வந்தது

19. இளமைக் கல்வி ஞாபகம் வந்தது
வளமான வாழ்வும் எனக்குக் கிடைத்தது
ஒழுக்க நெறியும் ஒழுங்காய் அமைந்தது
வாழ்க்கையின் இலக்கு நன்றாய் புரிந்தது

20. உயரிய ஞானம் எனக்குள் வந்தது
உண்மை நிலையும் எனக்குப் புரிந்தது
ஆன்ம தத்துவம் எனக்குள் வந்தது
ஆன்ம நேயம் எனக்கு வந்தது

21. புல்லில் இறைவனை உணர முடிந்தது
புல்லும் கல்லும் இறைவன் ஆனது
கல்லான மனமும் கரைந்து விட்டது
கல்லிலும் இறைவனைக் காண முடிந்தது

22. நல்லோர் நட்பும் இனிதே கிடைத்தது
அல்லாத செயலும் அகன்று விட்டது
நாக்கு ருசியும் நலிந்து விட்டது
நோயின் கடுமை என்னை வதைத்தது

23. மனத்தின் வலிமை அதிகம் வந்தது
மனமாசு அகன்றிட சேவை வந்தது
மாசில்லா இதயம் புனிதம் ஆனது
மாதவம் பெறுகிட வல்லமை வந்தது

24. ஆக்ஞா சக்கர ஜோதி மலர்ந்தது
அங்கே ஆனந்தம் பொங்கி எழுந்தது
ஆனந்த சாகரம் அன்பாய் கனிந்தது
அன்பும் கடலாய் மாறி விட்டது

25. இன்பமும் துன்பமும் எங்கோ மறைந்தது !
ஈசன் பாதம் எனக்குள் வந்தது
நேசத்தின் உறைவிடம் எனக்குள் நிறைந்தது
பாசமும் உறவும் எங்கோ மறைந்தது !

26. **ரமணர்** ஞானமும் எனக்கு வந்தது
ரமணர் வாழ்க்கை பாடலாய் வந்தது
ரமணர் கீதம் எனக்குள் நிறைந்தது
**ரமணாஸ்ரமம் ஜோதியாய் ஒளிர்ந்தது**

– திருச்சிற்றம்பலம் –





## நன்றியுரை

ஸ்ரீமத் அமலானந்த சுவாமிகள் வேதாந்த மடாலயத்தில்
வெளிவந்த அத்தனை நூல்களுக்கும் அணிந்துரை
எழுதிய உலாவரும் ஒளிக்கதிர் ஆத்ம ஞான சிகாமணி
**திரு. S. சிவாஜி** அவர்களுக்கு
எனது இதயம் கலந்த நன்றியைத்
தெரிவித்துக் கொள்கிறேன்.



**- இரா. பூவிலுடையார்**

## சூரிய காயத்ரி மந்திரம்

ஓம் பூர் புவ ஸ்வஹ
தத் சவிதுர் வரேண்யம்
பர்கோ தேவஸ்ய தீமஹி
தன்னோ சர்வ ப்ரசோதயாத் :

---

சிவன் விசுவாமித்திர முனிவருக்கு அருளியது.

ஓம் தத் சத்

# சமூக நீதிப் பாடல்

("மணப்பாறை மாடுகட்டி, மாயவரம் ஏறுபூட்டி" என்ற பாடல் மெட்டு)

தந்தை மாரே தாய்மாரே இளைஞர்களே
இந்தப் பாடல் கேளுங்க – நீங்க
சிந்தித்துச் செயல்பட்டு உயருங்க – தந்தை

1. படிப்பும் பெருகிப் போச்சு
வசதிகளும் பெருகிப் போச்சு
நாகரீகம் வளர்ந்து போச்சு வீட்டுல – ஆனால்
மனித நேயம் குறைஞ்சு போச்சு நாட்டுல – தந்தை

2. ஆசைகள் பெருகிப் போச்சு
அன்பும் குறைஞ்சு போச்சு
கலகங்கள் பெருகிப் போச்சு நாட்டுல! – ஆனால்
கம்ப்யூட்டர் பெருகிப் போச்சு வீட்டுல! – தந்தை

3. நிதி வசதி அதிகமாச்சு
முணு முணுப்பும் அதிகமாச்சு
முதியோர் இல்லம் பெருகிப் போச்சு நாட்டுல – நம்ம
நிம்மதியும் குறைஞ்சு போச்சு வீட்டுல – தந்தை

4. பெற்றோரை மதிப்பதில்லை
சொன்னபடி நடப்பதில்லை
கற்றபடி வாழவில்லை பாருங்க – நீங்க
பெரியோரை மதித்து வாழ்ந்து உயருங்க – தந்தை

5. ஆன்மிகம் உயர்வு தரும்
ஒழுக்கம் அன்பு பண்பு தரும்
உண்மை பேசி வாழுங்க வீட்டுல – நீங்க
உள்ளத்திலே அமைதி பெற்று வாழுங்க – தந்தை

6. காந்தி மகான் நடந்த வழி
கடை வழிக்கு உதவும் வழி
கரம் கோர்த்து சேவை செய்வோம் வாருங்க – நீங்க
கடவுளையே உள்ளத்தில் உணருங்க – தந்தை

ஓம் தத் சத்

# கண்டிகை கிராம மனித நேய இளைஞர் நற்பணி மன்ற வெளியீடு புதூர்

## என்னுரை

அகண்ட பரிபூரண சச்சிதானந்த சொரூபமாக விளங்கும் குருநாதன் திருவடிகளை வணங்கி, குருவருளால் இந்த நூலில் கண்ட பாடல்களை யாம் எழுதியுள்ளோம். மேற்படி நூல் உருவாகி வெளியாவதற்கு காரணகர்த்தாவான தவத்திரு. மனிதநேயச் செம்மல் கு. தியாகராஜன் ஐயா அவர்கள் ஆற்றிவரும் மனித நேயத் தொண்டுகளை உளமார பாராட்டி முதற்கண் அன்னாருக்கு எமது நன்றியையும், வணக்கத்தையும் தெரிவித்துக் கொள்கிறோம்.

அமெரிக்காவில் வாழும் பசுவும் கூட அம்மா என்ற அமுதமான சொல்லால் கூப்பிடுகிறது. **Mother** என்று கூப்பிடுவதில்லை. எனவே இந்தப் பெருமை தமிழ்மொழிக்கு மட்டுமே இருக்கிறது. கிராமத்தை இறைவன் படைத்தான். நகரத்தை மனிதன் படைத்தான். இதுவே உண்மையான செய்தியாகும்.

ஆனால் இன்றைய நாளில் ஆங்கிலம், விஞ்ஞானம், நாகரீகம் என்ற அடிப்படையில் நாம் நமது தாய்மொழியின் சிறப்பையும், நமது பாரத கலாச்சாரத்தையும் மறந்து கொண்டிருக்கிறோம். அம்மா இன்றி நாமில்லை, உயர்வில்லை, உயிரில்லை, உய்வில்லை என்ற கருத்துக்களை நாம் ஏற்றுக் கொள்ள வேண்டும். தாய்மொழியின்றி எந்தச் சிறப்பும் இல்லை என்ற உண்மையை நாம் எல்லோரும் உணர்ந்து நடந்து கொண்டால் பெற்ற தாய்க்கும், தாய்நாட்டிற்கும் நாம் செலுத்தும் நன்றிக் கடனாகும். அந்நிய நாகரீகம் என்ற மோகத்தில் நாம் அகப்பட்டுக் கொண்டோம். கொஞ்சமாவது மொழிப்பற்று, நாட்டுப்பற்று நமக்கு இருக்க வேண்டாமா ?

நமது பாரத கலாச்சாரம் நமது குழந்தைகள் மூலமாக வளர்க்கப்பட்டு, காக்கப்பட வேண்டியது அவசியம் என்ற அடிப்படையில்தான் இப்பாடல்கள் குருவருளாலும், திருவருளாலும் எழுதப்பட்டுள்ளன என்பதை இங்கே பணிவுடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

நமது பாரதம் விடுதலை பெற ஆயிரக்கணக்கான தியாகப் பெருமக்கள் தங்கள் உடல், பொருள், ஆவி மூன்றையும் தியாகம் செய்துவிட்டு மறைந்தும் நமது உள்ளங்களில் நிலையாக இருக்கின்றனர். சுதந்திரம் பெறுவதற்கு முன்பு ஆங்கிலேயருக்கு அடிமையாக இருந்தோம். ஆனால் இன்று சுயநலப் பேய்களுக்கு நாம் அடிமையாக இருக்கிறோம். மனிதனை மனிதனாக மதிக்கும் பண்பும் இன்று இல்லை. வருங்காலம் இராம ராஜ்யமாக மலர வேண்டுமானால், ஒழுக்கம், ஒற்றுமை, அன்பு, பொதுநலத் தொண்டு, மனிதநேயம் நம்முடன் வளர வேண்டும். சுயநலப் பேயை விரட்ட வேண்டும். இதுவே நமது லட்சியமாக இருக்க வேண்டும்.

நாம் பள்ளியில் திருக்குறள், தேவாரம், திருப்புகழ், போன்ற நீதி நூல்களைக் கற்றுக் கொள்கிறோம், கற்றுத் தருகிறோம். ஆனால் கற்ற கல்வியை நாம் நடைமுறைப்படுத்த தயங்குகிறோம். ஏன் இந்த அவலநிலை? தான் மட்டும் நன்றாக வாழ வேண்டும். பிறரைப் பற்றி கவலை வேண்டாம் என்ற சுயநலம் இருப்பதால்தான், ஒழுக்கம், ஒற்றுமை, அன்பு போன்ற பண்புகள் குறைந்து வருகின்றன. சமூகத்தில் உயர் கல்வி கற்றவர்கள் கூட தவறுகள் செய்வதற்குத் தயங்குவதில்லை.

நாம் இந்தியத்தாய் மக்கள் என்ற பேருணர்வு நம்மிடையே உயிரோட்டமாக வளர வேண்டும். அப்போதுதான் நாம் பெற்றுள்ள சுதந்திரம் அர்த்தமுள்ளதாகும்; இல்லாவிட்டால் தீவிரவாதம், கொலை, கொள்ளைதான் தலைதூக்கி நிற்கும் என்பதில் ஐயமில்லை.

எனவே, மேற்கண்ட இலட்சியம் நிறைவேற ஆசிரியப் பெருமக்கள், கல்வி அதிகாரிகள், கல்வி நிறுவனங்கள், ஒழுக்கக் கல்வி, ஆன்மீகக் கல்வியை மாணவ மாணவியருக்குக் கற்றுத்தர வேண்டும். நாட்டு நலனில் எல்லோருக்கும் பங்கு உண்டு என்பதை நாம் மறக்கக் கூடாது.

செம்மல் தவத்திரு. கு. தியாகராஜன் ஐயா அவர்களுக்கு எமது நன்றியையும், வணக்கத்தையும் தெரிவித்துக் கொள்கிறோம்.

இந்நூலில் எழுதப்பட்டுள்ள பாடல்களை அனைவரும் வாசித்து சிறுவர் முதல் பெரியோர் வரை வீடும் நாடும் சிறந்து விளங்கிட நடைமுறைப்படுத்தினால் நலம் பயக்கும் என்ற கருத்தை பணிவுடன் கூறி, நன்றியுரையை நிறைவு செய்கிறோம். நன்றி! வணக்கம்.

மற்றும் கண்டிகை கிராம மக்கள், இளைஞர்கள், ஆசிரியர்கள், மாணவ மாணவியர் மற்றும் கிராம முன்னேற்றத்தில் பங்கு கொண்டு தொண்டு புரியும் இளைஞர்களுக்கும், நற்பணி மன்றத்தாருக்கும் எமது நன்றியையும், வணக்கத்தையும் அன்புடன் தெரிவித்துக் கொள்கிறோம்.

– திருச்சிற்றம்பலம் –



மனிதநேயத் தொண்டில்

தவத்திரு. **இரா. பூவிலுடையார் சுவாமிகள்**

ஸ்ரீமத் அமலானந்த வேதாந்த சேவா சங்க காப்பாளர்

நாகவேடு. அரக்கோணம் TK. செல் : 94444 72689

ஓம் தத் சத்
ஸ்ரீ குருப்யோ நம :

# எமது வாழ்க்கைக் குறிப்புகள்

| | | |
|---|---|---|
| பெயர் | : | **இரா. பூவிலுடையார்** |
| தந்தை | : | தெய்வத்திரு. அ.வீ. இராமசாமி (மறைவு 1937) |
| தாய் | : | தெய்வத்திருமதி. இரா. வேலம்மாள் |
| துணைவி | : | தெய்வத்திருமதி. பூ. கிருஷ்ணம்மாள் |
| மூத்த சகோதரி | : | தெய்வத்திருச்செல்வி. இரா. கடற்கரை அம்மாள் |
| மூத்த சகோத்ரர் | : | தெய்வத்திரு. இரா. ஆறுமுகச்சாமி |
| மாமனார் | : | தெய்வத்திருமதி. கு. அருணைகிரியார்<br>இந்து துவக்கப்பள்ளி நிர்வாகி, வீரசிகாமணி |
| அக்காள் | : | தெய்வத்திருமதி. கு.அ. பழனியம்மாள் |
| மூத்த மகன் | : | P. காசிராஜன், Sr.Sec.Engineer / ICF |
| இளைய மகன் | : | P. அருள்ராஜன், Jr.Engineer/TBM CN/S Rly. |
| மூத்த மகள் | : | T. பத்மாவதி, D.C.P. |
| இளைய மகள் | : | M. உமாமகேஸ்வரி |
| மூத்த மருமகன் | : | P. திருமலைச்சாமி, M.Sc.,M.Phil,B.Ed.,(Professor Arts College, Nandanam, Ch - 35.) |
| இளைய மருமகன் | : | D. மோஹனசெல்வம் (வாணிபம்) திருவல்லிக்கேணி |
| மூத்த மருமகள் | : | P.K. இந்திரா, M.A., (B.T.Asst.Board High School,Chromepet) |
| இளைய மருமகள் | : | P.A. மாரிஜோதி, B.A., (Sec.Grade Teacher,Panchayat Ele.School, Urogadam Pudukkottai) |
| பெரியப்பாக்கள் | : | தெய்வத்திரு. அ.வீ. பழனிச்சாமி<br>தெய்வத்திரு. அ.வீ. சங்கரநாராயணன் |
| சித்தப்பா | : | தெய்வத்திரு. அ.வீ. அருணைகிரி<br>ஸ்ரீமத் இரா. கந்தையா சுவாமிகள்<br>திருவண்ணாமலை சந்நியாசம் |

| | | |
|---|---|---|
| ஆசிரியர் | : | தெய்வத்திரு. பா. ஜெயமணி செல்லையா ஆரம்பப்பள்ளியில் சங்கீதம் மற்றும் பக்திப் பாடல்கள் கற்றுக் கொடுத்த பெருந்தகை. |
| ஆசிரியை | : | தெய்வத்திருமதி. சொர்ணம் செல்லையா ஆசிரியர் |
| பிறந்த ஊர் | : | அரியநாயகிபுரம், சங்கரன் கோவில் வட்டம், நெல்லை மாவட்டம், Pin Code : 627 862. |
| பிறந்த நாள் | : | 06.09.1936 (நடுத்தரக்குடும்பம்) |
| கல்வித்தகுதி | : | S.S.L.C. (1955) உயர்நிலைப்பள்ளி, கடையநல்லூர் |
| தொழில் | : | ஓவிய ஆசிரியர் (3½ ஆண்டுகள்) |
| Occupation | : | Civil Draughtsman, ECC (L&T) - (1½ years) Worked under Er.A.Ramakrishna, (Late) President of L & T. |
| Draughtsman | : | From 1962 Nov to 1994 April Chief Engineer Officer - Construction. S.Rly. Chennai - 8. (31½ years) |
| பணி செய்வு | : | Retd.Section Engineer in April 1994. |

மனித நேயத்துடன்

தவத்திரு. **இரா. பூவிலுடையார் சுவாமிகள்**

ஸ்ரீமத் அமலானந்த வேதாந்த சங்க காப்பாளர் நாகவேடு கிராமம், அரக்கோணம் தாலுக்கா, செல் : 9444472689

# ஆன்மீக வாழ்க்கையும், தொண்டும்

1. ஸ்ரீமத் அமலானந்த சுவாமிகள் வேதாந்த சேவா சங்கம், நாகவேடு, அரக்கோணம் சமீபம் 1965லிருந்து அங்கத்தினராக இருந்து வருகிறோம். 10 ஆண்டுகளாக மடாலயத்தின் காப்பாளர்ராக இருக்கிறோம்.

2. பகவான் ஸ்ரீ சத்ய ஸாயி சேவா நிறுவனத்தில் குரோம்பேட்டை சமிதியில் 1979 ஆம் ஆண்டு முதல் பாலவிகாஸ் குருவாக இருந்து கொண்டு உயர்நிலைப் பள்ளி மாணவ, மாணவியருக்கு ஆன்மீகக் கல்வி கற்றுத் தருகிறோம். அனைத்து மதக் கோட்பாடுகள், சனாதன தர்மத்தின் சிறப்பு அம்சங்கள், நமது பாரதத்தில் உள்ள பெரிய மகான்களின் வரலாறுகள், பகவான் ஸ்ரீ இராமகிருஷ்ண பரமஹம்சர், சுவாமி விவேகானந்தர், மாணிக்க வாசகர், பகவான் ஸ்ரீ ரமண மகரிஷி, ஆதிசங்கரரின் பஜகோவிந்தம் மற்றும் ஸ்ரீ ராமானுஜர், மத்துவர் போன்ற மகான்களின் அருள்வாக்குகள் பற்றியும் கற்றுக் கொடுக்கிறோம்.

3. ஸ்ரீ சத்ய ஸாயி சேவா நிறுவனம் குரோம்பேட்டையில் நடத்தி வரும் **SRI SATHYA SAI INSTITUTE OF EDUCARE** பள்ளியில் கமிட்டி அங்கத்தினராக இருந்து கொண்டு, பள்ளிக் கட்டிட வேலைகளை சேவையாகக் கவனித்துக் கொண்டு வருகிறோம்.

4. மேற்படி மடாலயத்திலும், ஸ்ரீ சத்ய ஸாயி நிறுவனத்திலும் தொண்டு செய்து வருகின்றோம்.

<u>தற்போதைய முகவரி :</u>

பிளாட் நெ.2A, சுகுணா காலனி விரிவு, நக்கீரன் தெரு, குரோம்பேட்டை,
சென்னை—44. மொபைல் : 94444 72689

ஆன்மீகத் தொண்டில்

**இரா. பூவிலுடையார் சுவாமிகள்**



# விபு வித்யா பீடம்

திருப்பூர் குமரன் தெரு,
பாடியநல்லூர்,
சென்னை - 600 052.



**2011-ம் ஆண்டிற்கான**

## ஆத்ம ஞான விருது

**வாழ்நாள் ஆன்மிக சேவைக்கான விருதும்,**

## " ஆத்ம ஞான கவி "

**என்ற சிறப்பு பட்டம்**



**தவத்திரு. பூவில் உடையார் சுவாமிகள்**
**அவர்களுக்கு வழங்கப்படுகிறது.**

விருது வழங்கி சிறப்பிப்பவர் **"ஆத்மஞானசுடர்"**
தவத்திரு. **வேணுகோபால் சுவாமிகள்**

**தவத்திரு. இரா. பூவிலுடையார் சுவாமிகள்**
**சிறப்பு பட்டம் பெற்ற படம்**



தவத்திரு. இரா. பூவிலுடையார் சுவாமிகள்

**JANUARY**

| S | M | T | W | T | F | S |
|---|---|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 |
| 8 | 9 | 10 | 11 | 12 | 13 | 14 |
| 15 | 16 | 17 | 18 | 19 | 20 | 21 |
| 22 | 23 | 24 | 25 | 26 | 27 | 20 |
| 29 | 30 | 31 | | | | |

**FEBRUARY**

| S | M | T | W | T | F | S |
|---|---|---|---|---|---|---|
| | | | 1 | 2 | 3 | 4 |
| 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 |
| 12 | 13 | 14 | 15 | 16 | 17 | 18 |
| 19 | 20 | 21 | 22 | 23 | 24 | 25 |
| 26 | 27 | 28 | 29 | | | |

**MARCH**

| S | M | T | W | T | F | S |
|---|---|---|---|---|---|---|
| | | | | 1 | 2 | 3 |
| 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 |
| 11 | 12 | 13 | 14 | 15 | 16 | 17 |
| 18 | 19 | 20 | 21 | 22 | 23 | 24 |
| 25 | 26 | 27 | 28 | 29 | 30 | 31 |

**APRIL**

| S | M | T | W | T | F | S |
|---|---|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 |
| 8 | 9 | 10 | 11 | 12 | 13 | 14 |
| 15 | 16 | 17 | 18 | 19 | 20 | 21 |
| 22 | 23 | 24 | 25 | 26 | 27 | 28 |
| 29 | 30 | | | | | |

**MAY**

| S | M | T | W | T | F | S |
|---|---|---|---|---|---|---|
| | | 1 | 2 | 3 | 4 | 5 |
| 6 | 7 | 8 | 9 | 10 | 11 | 12 |
| 13 | 14 | 15 | 16 | 17 | 18 | 19 |
| 20 | 21 | 22 | 23 | 24 | 25 | 26 |
| 27 | 28 | 29 | 30 | 31 | | |

**JUNE**

| S | M | T | W | T | F | S |
|---|---|---|---|---|---|---|
| | | | | | 1 | 2 |
| 3 | 4 | 5 | 6 | 7 | 8 | 9 |
| 10 | 11 | 12 | 13 | 14 | 15 | 16 |
| 17 | 18 | 19 | 20 | 21 | 22 | 23 |
| 24 | 25 | 26 | 27 | 28 | 29 | 30 |

**JULY**

| S | M | T | W | T | F | S |
|---|---|---|---|---|---|---|
| 1 | 2 | 3 | 4 | 5 | 6 | 7 |
| 8 | 9 | 10 | 11 | 12 | 13 | 14 |
| 15 | 16 | 17 | 18 | 19 | 20 | 21 |
| 22 | 23 | 24 | 25 | 26 | 27 | 28 |
| 29 | 30 | 31 | | | | |

**AUGUST**

| S | M | T | W | T | F | S |
|---|---|---|---|---|---|---|
| | | | 1 | 2 | 3 | 4 |
| 5 | 6 | 7 | 8 | 9 | 10 | 11 |
| 12 | 13 | 14 | 15 | 16 | 17 | 18 |
| 19 | 20 | 21 | 22 | 23 | 24 | 25 |
| 26 | 27 | 28 | 29 | 30 | 31 | |

**SEPTEMBER**

| S | M | T | W | T | F | S |
|---|---|---|---|---|---|---|
| | | | | | | 1 |
| 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 |
| 9 | 10 | 11 | 12 | 13 | 14 | 15 |
| 16 | 17 | 18 | 19 | 20 | 21 | 22 |
| 23 | 24 | 25 | 26 | 27 | 28 | 29 |
| 30 | | | | | | |

**OCTOBER**

| S | M | T | W | T | F | S |
|---|---|---|---|---|---|---|
| | 1 | 2 | 3 | 4 | 5 | 6 |
| 7 | 8 | 9 | 10 | 11 | 12 | 13 |
| 14 | 15 | 16 | 17 | 18 | 19 | 20 |
| 21 | 22 | 23 | 24 | 25 | 26 | 27 |
| 28 | 29 | 30 | 31 | | | |

**NOVEMBER**

| S | M | T | W | T | F | S |
|---|---|---|---|---|---|---|
| | | | | 1 | 2 | 3 |
| 4 | 5 | 6 | 7 | 8 | 9 | 10 |
| 11 | 12 | 13 | 14 | 15 | 16 | 17 |
| 18 | 19 | 20 | 21 | 22 | 23 | 24 |
| 25 | 26 | 27 | 28 | 29 | 30 | |

**DECEMBER**

| S | M | T | W | T | F | S |
|---|---|---|---|---|---|---|
| | | | | | | 1 |
| 2 | 3 | 4 | 5 | 6 | 7 | 8 |
| 9 | 10 | 11 | 12 | 13 | 14 | 15 |
| 16 | 17 | 18 | 19 | 20 | 21 | 22 |
| 23 | 24 | 25 | 26 | 27 | 28 | 29 |
| 30 | 31 | | | | | |

Elakiya offset Printers, Ch - 91.
Ph : 044 2258 1373 / 94441 18478